உ

கணபதி துணை.

# சங்கரநயினார்கோயில் அந்தாதி.



இது

மஹாமஹோபாத்யாய-தாக்ஷிணாத்யகலாநிதி

**Dr. உ. வே. சாமிநாதையரவர்களால்**

பரிசோதித்துத்

தாம் நூதனமாக எழுதிய குறிப்புரையுடன்

பதிப்பிக்கப்பெற்றது.






செந்தமிழ்ப்பிரசுரம்—௯௦.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

1934.

விலை அணா 6.

உ

கணபதிதுணை.

# முகவுரை.



திருச்சிற்றம்பலம்.

காரேறு நெடுங்குடுமிக் கயிலா யன்காண்
கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
போரேறு நெடுங்கொடிமே லுயர்த்தி னான்காண்
புண்ணியன்கா ணெண்ணரும்பல் குணத்தி னான்காண்
நீரேறு சுடர்ச்சூலப் படையி னான்காண்
நின்மலன்கா ணிகரேது மில்லா தான்காண்
சீரேறு திருமாலோர் பாகத் தான்காண்
திருவாரூ ரான்காணென் சிந்தை யானே. (திருநா. தே.)

திருச்சிற்றம்பலம்.

## அந்தாதி.

தமிழ்ப்பிரபந்தங்களுள் அந்தாதியென்பது ஒன்று. அது முதற்செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்து அசை சொல் சீர் அடி முதலியவற்றில் ஏதேனும் ஒன்று அடுத்தசெய்யுளின் முதலில் அமையவும், *நூலின் இறுதிச்செய்யுளில் உள்ளது முதற்பாட்டின் முதலாக அமையவும் பாடப்படுவது. அவ்வந்தாதி யாப்புவகையாற் பலவாகும். அவை, கலித்துறையந்தாதி வெண்பாவந்தாதி பதிற்றுப்பத்தந்தாதி முதலியனவாம்; அவற்றுள் திரிபாகவும் யமகமாகவும் அமைந்தவை முறையே †திரிபந்தாதியெனவும் யமகவந்தாதியெனவும் வழங்கப்படும். திரிபைத் திருகலென்றும் திருக்கென்றும் கூறுவர். திரிபும் யமகமும் ஒரே அந்தாதியிற் கலந்துவருதலும் உண்டு. இவ்வகை நூல்கள் சொற்றொடர்நிலைச்செய்யுளின்பாற் படும்.

---

*இப்படி வருதல் மண்டலித்தலென்று வழங்கப்படும்.

† "குடந்தையந் தாதி திரிபா வொருசதங் கூறிடுவன்" என்றார் ஒரு பெரியார்.

படிப்பவர்களுக்குச்சொற்றொடரைப் பிரிக்கும் முறை, ஒரு சொல்லின் பலபொருள்கள், பழையவரலாறு முதலியவற்றை எளிதில் அறிந்து கொள்ளவும், ஞாபகசக்தியை அதிகப்படுத்தவும் தக்க கருவிகளாக இருத்தலின், பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டில் இவ்வந்தாதிகள் ஆங்காங்குத் தமிழ்பயின்றுவரும் மாணாக்கர்களுக்குப் பள்ளிக்கூடத்திலே ஆரம்பத்தில் கருவிநூல்களாகக் கற்பிக்கப்பெற்றுவந்தன. திரிபுவகையிற் புகலூரந்தாதி, திருவேங்கடத்தந்தாதி முதலியவைகளும், யமகத்தில் திருவரங்கத்தந்தாதி முதலியனவும் தமிழ் மாணாக்கர்களால் அங்ஙனம் தொன்றுதொட்டுப் பயிலப்பட்டுவருகின்றன. நிற்க.

## சங்கரநயினார்கோயில் அந்தாதி.

சங்கரநயினார்கோயிலந்தாதி என்பது பாண்டிநாட்டிலுள்ளதாகிய சங்கரநயினார்கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீசங்கரநாராயணப் பெருமான் விஷயமாகப் பாடப்பெற்றது. இது கூழையந்தாதி, வராசையந்தாதி எனவும் வழங்கும். கூழையென்பதும் வராசையென்பதும் சங்கரநயினார்கோயிலின் திருநாமங்கள். இத்தலத்தில் ஒருபுற்றிற் பாம்பின் திருவுருவங்கொண்டு எழுந்தருளியிருந்த கருணைக்கடலாகிய சிவபெருமான் இங்கே இருந்த காட்டைச் செப்பஞ்செய்யவந்த மணிக்கிரீவன் என்பவனால் வெட்டப்பெற்று வாலற்றுக் கூழை யுருவத்தோடு அவனுக்குக் காட்சியளித்தமையின் கூழைப்பிரான் என்னும் திருநாமம் அவருக்கு ஆகிப் பின்பு கூழை யென்பது இத்தலத்திற்கும் ஆயிற்று. இதற்கு அருகில் ஓடும் ஆறு கூழையாறென்று வழங்கப்படுமென்பர்.

*ஸ்ரீராசபுரம் என்னும் வடமொழிப்பெயர் ராசையென மருவிற்று; இராசவில்லிபுரத்தின் மரூஉவாகிய ராசையென்பதினின்றும் வேறுபாடு புலப்பட வராசையென வழங்கப்பெற்றதென்று தோற்றுகிறது.

இத்தலம் பாண்டிநாட்டிலுள்ள பஞ்சபூதஸ்தலங்களுள் பிருதுவிஸ்தலமென்றும் சிவபெருமானுக்குரிய சுகா-மூர்த்தங்களுள் ஒன்றாகிய ஸ்ரீசங்கரநாராயண மூர்த்தத்திற்குரிய ஸ்தலமென்றும் நூல்கள் கூறும்.

---

*இப்பெயர் இத்தலத்திற்கு உண்மை இந்தத் தலத்திற்குரிய சாஸனத்திலுள்ள ஒருசுலோகத்தால் தெரியவருகிறது (திருவாங்கூர்ச் சிலாசாஸனங்கள், VI, ப. 90.)

என்னுடைய தமிழாசிரியராகிய மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் இலக்கியபாடஞ் சொல்லிவருகையில் ஒரு முறை இந்நூலிலுள்ள,

"இளந்தென் றலைவட வானல மென்னு மிகன்மதன்கா
களந்தென் றலையமன் காணென வேங்குங் கடலகடு
பிளந்தென் றலைவந் தழிப்பதெந் நாளெனும் பேதையிவ்வா
றளந்தென் றலையி லெழுத்தெனுங் கூழை யரும்பொருளே" (க)

என்ற *செய்யுளை ஒன்றற்கு மேற்கோளாகச்சொல்லி, இது கூழையென்னும் ஒரு தலத்துக்குரிய அந்தாதியிலுள்ளதென்றும் அந்நூல் கிடைக்கவில்லையென்றும் எங்களுக்குச் சொன்னதன்றி இதன் சொல் நயம் பொருள்நயங்களை மிகவும் பாராட்டினார்கள்; 'அளந்தென் தலையில் எழுத்தெனும்' என்ற பகுதி மிகவும் அருமையாக அமைந்து இச்செய்யுளின் சுவையை அதிகரிக்கச் செய்கின்றதென்றும் சொன்னார்கள். அக்காலத்தில் கூழையென்பது இன்ன தலம் என்று தெரியவில்லை. அப்பால், வருபவர்களிடம் இந்த நூல் கிடைக்குமாவென்று அவர்கள் விசாரித்தும் வந்தார்கள்; கிடைத்திலது. கிடைக்கவில்லையே என்ற வருத்தம் அவர்களுக்கு இருந்துவந்தது.

பின்பு நானும் விசாரித்துவந்தேன். †கூழையென்பது இன்ன தலமென்பதும், இவ்வந்தாதியின் ஆசிரியர் இன்னாரென்பதும் தெரியவில்லை.

இந்நூலைப் பெற்றுப் படிக்கவேண்டுமென்ற விருப்பம் எனக்கு மிகுதியாக இருந்துவந்தது. பலவகையில் முயன்றும் கிடைக்கவில்லை. சிலமாதங்களுக்குமுன்பு என்னிடமுள்ள பழஞ்சுவடிகளைப் பிரித்துப்

---

* அன்பர் தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராசபண்டிதர் தாம் பதிப்பித்த தனிப்பாடற்றிரட்டை இரண்டாமுறை (1878ஹ) பதிப்பித்தபொழுது அவருடைய விருப்பத்தின்படி பல தனிப்பாடல்களை எழுதி அனுப்பினேன். அவற்றுள் இந்தச் செய்யுளும் ஒன்று.

† ஏறக்குறைய 55 வருஷங்களுக்குமுன்பு திருவாவடுதுறையில் நான் இருந்தகாலத்தில் அங்கே ஒருசமயம் பாடங்கேட்கவந்த ஏழாயிரம்பண்ணை, தாமோதரம்பிள்ளையென்பவர் கூழையென்பது பசுவந்தனையென்னும் ஸ்தலமென்றும், இந்நூலை இயற்றியவர் கடிகைமுத்துப்புலவரென்றும் கூறினர்.

பார்த்துவருகையில் தென்திருப்பேரை ஏட்டுச்சுவடி ஒன்றன்மேல் 'கருடத்துதி' என்ற பெயர் எழுதப்பட்டிருந்தமை தெரிந்தது. 'அஃது இவ்வளவு பெரியதாயிராதே!' என்ற ஐயத்தால் வேண்டிய பக்குவம் செய்து ஒவ்வோரேடாகப் பிரித்துப் பார்த்தேன்; பல ஏடுகள் பின்னர் ஒட்டிக்கொண்டிருந்தன. அவற்றிலுள்ள சில ஏடுகளிலிருந்த பாடல்களில் கூழை என்ற பெயர் காணப்பட்டது. உடனே எனக்கு உண்டான ஆனந்தத்திற்கு அளவில்லை. வேறொரு புதிய சுவடியும் அதில் இருந்தது. வாராசையந்தாதி என்ற பெயர் அதிற் காணப்பட்டது. இரண்டையும் பார்த்தபோது இரண்டும் ஒரு நூலாகத் தோற்றின. பின்னது பெரும்பாலும் முன் உள்ள பழைய பிரதியைப்பார்த்துப் பிரதிபண்ணப்பட்டதென்று தெரியவந்தது; அதிற் சில வேறுபாடுகளும் இருந்தன.

இவ்வந்தாதி நூறுசெய்யுட்களுள்ளதேனும் கிடைத்தவை 98 செய்யுட்களும் 99-ஆவது செய்யுளின் முதலடியுமே. கூழைப்பெருமானுடைய அந்தாதியாதலின் கூழையாகவே கிடைக்கும்படி திருவருள் செய்வித்ததுபோலும்! முற்றும் கிடைப்பின் அநுகூலமாகவிருக்கும்.

இரண்டுபிரதிகள் கிடைத்தமையின் ஒன்றிற் சிதைந்திருந்த செய்யுட்பகுதிகள் மற்றதன் உதவியால் உண்மைவடிவமறிந்து ஒழுங்குபடுத்தப்பெற்றன. புதிய பிரதியில் 96-செய்யுட்களும் 97-ஆவது செய்யுளின் முதலடியும் இருந்தன. அப் பிரதியின் இறுதியில், 'அக்ஷயஹு ஆவணிமீ உடு-ம்வ சனிக்கிழமையும் அசுபதியிலேயுமெழுதி முற்றியது. முற்றிலும் இந்தச்சுவடி எழுதினபிறகு ரோகந்தீர்ந்தது ...சுப்பிரமணியக் கடவுள் துணை. குழைக்காதர் திருவடிகளே சரணம். கூாஅயிசு ஹு அற்பிசிமீ மைக்காப்புச் சாத்தியதென்றறியத்தக்கது' என்பது எழுதப்பட்டிருந்தது. இதனால் அப்பிரதி எழுதப்பட்டகாலம் இற்றைக்கு 123 வருடங்களுக்கு முன்பென்பதும் இந்நூல் அதற்கு முன்பே இயற்றப்பட்டதென்பதும் தெரியவந்தன.

இதற்குக் கூழையந்தாதி வாராசையந்தாதி என்ற பெயர்கள் பிரதிகளிற்காணப்பட்டாலும் தமிழ்நாட்டில் கூழை, வாராசை என்ற பெயர்கள் அதிகமாக வழக்கில் இல்லாமையால் எல்லோருக்கும் விளங்கவேண்டி சங்கரநயினார்கோயிலந்தாதி என்னும் பெயர் புதிதாக அமைக்கப்பட்டது.

இத்தலத்திற்கு ஒருலா உண்டு. அது குறிப்புரையுடன் சில மாதங்களுக்குமுன் என்னால் 'சிவநேசன்' என்னும் பத்திரிகை மூலமாக வெளியிடப்பெற்றுள்ளது.

## நூலாராய்ச்சி.

இந்நூலிற் பதினொருசெய்யுட்கள் (65–74,98) யமகமாக அமைந்துள்ளன; மற்றவை திரிபு; எளிதிற் பிரித்துப் பொருள்காணும்படி செய்யுட்கள் அமைந்திருக்கின்றன. இந்நூலாசிரியர் இன்னாரென்று தெரியவில்லை; ஆனாலும், இவர் படிப்பவர்கள் எளிதிற் பொருள் அறிந்துகொள்ளும்படி சொற்களையும் சொற்றொடர்களையும் திரிபு யமகங்களில் அமைத்துப்பாடும் சிறந்தகவிஞர்கள்வரிசையிற்சேர்த்து எண்ணத்தக்கவரென்பதுமட்டும் தெரிகிறது. இவருடைய வாக்கிலிருந்து இவர் வருத்தமின்றிச் செய்யுள் இயற்றும் திறமையுடையவரென்றும், அகப்பொருட்டுறைகளைச்செவ்வனே அமைத்துப்பாடுவதில் வல்லவரென்றும், சிவபெருமானுடைய திருவருள் ஒன்றனையே பற்றுக்கோடாக உடையவரென்றும், உலகவழக்கிற்பயிலும் சொற்களையும் கருத்துக்களையும் அமைத்துப்பாடும் இயல்பினரென்றும் தெரியவருகின்றது.

### 1. தல விஷயங்கள்.

இத்தலத்திற் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள மூர்த்தி கூழைப்பிரான், சங்கரர், சங்கரேசர், சங்கரநாராயணர், சிவசங்கரேசர், ஆவுடைநாயகர் என்ற பலதிருநாமங்களை உடையவர். இந்த நூலில் அங்கங்கே அவற்றைக் காணலாம். சங்கரநாராயணராகச் சிவபெருமான் இத்தலத்து எழுந்தருளியிருப்பதை, "கமழுந்துளவக் கண்ணிக் கரும்புய லோர் பாகர்" (70), "மாமனை யாவுடை மாதிடம் வைத்தவனே" (77) என்று கூறியிருப்பதன்றி, 56-ஆவது செய்யுளில், 'பாம்பை அணிந்த சடையை உடையாய், கவுத்துவமணியை அணிந்த மார்பையுடையாய், பூமியிலும் வானுலகத்திலும் சோதியாகநிற்பாய், அழகிய ஆகாயத்தை அளந்தாய், சிவப்பான திருமேனியை உடையாய், பச்சைநிறத்தையுடையாய், கூழையிலுள்ள சங்கரநாராயணனே!' என்று அவருடைய திருவுருவ வருணனையாலும் ஆசிரியர் விளக்கியிருக்கிறார். சங்கரநாரணர் என்ற திருநாமம் 98-ஆவது செய்யுளில் அமைந்துள்ளது.

அம்பிகையின் திருநாமம் ஆவுடைநாயகியென்பது. அது வட மொழியிற் கோமதி என்று வழங்கும். இந்நூலில் ஆவுடை, ஆவுடை நாயகி, ஆவுடைத்தோகை, ஆவுடைமாது, ஆவுடையம்மை என்று அத் திருநாமம் பலவகையாகக் காணப்படுகிறது.

இந்தத் தலத்தின் பெயர்களாகிய கூழை, சீராசை, ராசை, வாராசை என்பவை இந்நூலில் அங்கங்கே வந்துள்ளன. அவற்றுள் வாராசை யென்பது 23-ஆம் செய்யுளில் எதுகையில் அமைந்திருக்கின்றது.

தலவிருட்சம் புன்னை. அதனால் இதற்கு நாகவனம், புன்னைவனம் என்னும் திருநாமங்கள் உண்டு. அவையும் இந்நூலின்கண் காணப் படும். சிவபெருமான் புன்னைவிருட்சத்தினடியில் எழுந்தருளியிருத்தல், "நினைவாரிதயம் நிறைந்திருப்பார் புன்னை நீழலுற்றோர்" (54) என்பதிற் சொல்லப்படுகிறது.

ஆசிரியர் இத்தலவளங்களைப்பலபடியாகப்பாராட்டுகின்றார்: "பைம் போதருந்திக், கோவிக்கு மாவி புடைசூழுங் கூழை" (5), "மலங்கு தலைப்படும் வாவிகள்சூழ் வாராசை" (8) என்பவை முதலியவற்றால் வாவிவளத்தையும், "பொழில் மாகத் தளவுயர் சீராசை" (30), "படரும் பலவு புடைசூழுங்கூழை" (39), "காவில் வண்டுகள் தந்தந்தனமென்றிசை பாடுங் கூழை" (68), "பூங்கமு காரஞ் சொரி கூழை" (76) என்பவை முதலியவற்றாற் பொழில்வளத்தையும், "செய்யல ருந்தண் கமல முத் தீனுந்தென் கூழை" (52), "கமலவயற் கண்ணிக்கரும்பு" (70), "கண் ணின்மணி, காலங் கனலங் கழனியி ராசை" (72) என்பவை முதலியவற் றால் நிலவளத்தையும், "நவமணி மாளிகை சூழ் கூழை" (56), "கூழை யணிநகர்சூழ் வயலரு காவணங்காண்" (63) என்பவற்றால் நகரத்தின் செல்வச்சிறப்பையும், "அறந்திருந்தாநின்ற ராசை" (95) என்பதனால் அத்தலத்திலுள்ளார் அறம் செய்வாரென்பதனையும், "இன்றே னனைய தமிழ் வாராசை" (19), "தென்மலைபத்தமிழ்தேர் வாராசை" (37) என்ப வற்றால் அவர்கள் தமிழாராய்ச்சி செய்பவர்களென்பதையும் புலப்படுத்து கின்றார்.

## 2. சிவபெருமான் பெருமை.

சிவபெருமானுடைய பெருமைகளையும் திருவிளையாடல்களையும் திருவுருவத்தையும் பலவகையில் அமைத்துப் பாராட்டுகின்றார். அவர் அன்பர்க்கெளியவரென்பதை, "கங், காளா வாச மலர்ப்பதத் தோரெனக்கற்ற வரை, யாளர" (28), "என்றும், இருந்தந் தியான மியற்றநல்லோரிதயார விந்தம், திருந்தந்தி யாகன்" (31), "வந்தியா நின்ற பேர்க்கருள் கூழை யமலன்" (47), "நினைவா ரிதய நிறைந்திருப்பார்" (54), "கறை, பெயலரு காவணங் கன்பர்க்குள்ளார்" (63) என்பவை முதலியவற்றாலும், அவர் அன்பில்லார்க்கு அரியவரென்பதை, "கழல், மேனலங்கண்ணியுருகார்.... கலங்குவரே" (7), "இந்தப்பெற்றி செய்பார்க் கயலர்" (63), "பொற்றுளின்மலர், ஆங்கழுகாரகஞ்செல்லார்" (76), "அசேதனர்க்கெய்தார்" (89) என்பவற்றாலும் தெரிவிக்கிறார். அவரை வணங்குவார்க்கு யமபயம் இராதென்பதனை, "மலர்த்தாட் பணிசேர், பித்துரு மத்தனை யோவிட்டியமன் பிடிப்பதின்றே"(13),"கூழை பாவு பிறை, அடரும்பல்அதுக்கி யமனம் மேல்வா வஞ்சவனே" (39), "கைதொழுமேற், கைக்க யமன்றொடர் காலமெக் காலமக் காலமருள், கைக்கயமன்று" (73), "இயம படர்க்கு மஞ்சேம்" (90) என்று புலப்படுத்துகிறார். அன்றி அவருடைய தரிசனத்தால் இகபாவாழ்வு வருமென்பதனையும் (14), குற்றங்களெல்லாம் நீங்குமென்பதனையும் (23), அவர் பிறப்பை நீக்குவாரென்பதனையும் (45), வரந்தருவாரென்பதனையும் (94) பயன்களாகக்கூறுகின்றார்.

## 3. நெஞ்சறிவுறுத்தல்.

நெஞ்சைவிளித்துச் சொல்லுவதாக இதிற் பலசெய்யுட்கள் உள்ளன. அவற்றில், 'நெஞ்சமே, நீ உலகில் உள்ள ஆசையை ஒழித்துக் கூழைத்தலத்திற்சென்று சிவபெருமானைப் பாவி அவருடைய திருநாமங்களைச் சொல்லிக் கைகூப்பிப் பணியநினைப்பாயாக. அதனால் நற்பயன் உண்டாகும்' (39, 41) என்று சொல்லுகின்றார். "முத்தமிழ்கொண், டியங்கத் தாதவர்பா னெஞ்சமே யென்கொ லேற்பதுவே" (42) என்பதில் உலோபியரைச் சென்றுபாடுதல் பயனின்றென்று எடுத்துக்காட்டுகின்றார். அத்தகைய துன்பம் வாராமல் தம் அடியார்களைச் சங்கரேசர்

காப்பாரென்பதனை, "வாக்தருவார்......ஒண், கரந்தருவா வென்று லோபரையேத்துங் கருத்தறவே" (94) என்பதனால் விளக்குகின்றார். அவரைப்பணிதலொன்றனையே பெரும்பணியாகக்கொண்ட இவ்வாசிரியர் தம் கொள்கையை, "நெஞ்சே! வராரசைக் கதிரவன் நிகரும் அங்க, அலை நதி சூடி, என்று கைகூப்புவதே கருமம்; கவலை இனி வேறு வைக்கக்கடவது இன்றே" (67) என்று கூறுகின்றார்.

"கதி வீடருள, வரும் பாதகஞ்சமும் வாய்க்குங்கொலோ" (10), "நினதருள் மாரித் திவலைபட, நின்றே னனைய வெனக்கெந்த நாள்வந்து நேர்படுமே" (19), "சீராசை நாதர் மலர்ப்பதத்திற், போகத்தளவுள மெந்நா ளெனக்குப் பொருந்துவதே" (30), "எங்நா ளடைவனின் பாதத்தையே" (34), "என் னெஞ்சகம் வீற்றிருக்க...என்று காண்பதுவே" (59), "வரப்புரந் தென்னையங் காள மதிப்பதென்றே" (83), "திகம்பரர்க் கன், பிலக மெழுகி னுருகேம் வெவ்வேறெய்து மைம்புலனை, விலகம் எழுபவ மெவ்வாறிங் கோயும்" (96), "உள்ள முருக வொழியாத பாவி யுள்ளத்திலுள்ள, கள்ள முருக வருள்வதென்றோ" (97) என்பவற்றால் ஆசிரியர் சிவபெருமானுடைய திருவருளைப் பெறவேண்டுமென்ற ஆவல் மிக்கவரென்பது அறியப்படுகின்றது.

## 4. பிறதலச் செய்திகள்.

"கடுங்கலியானை கரும்புணக்கண்டவன்" (45), "வந்திக் கமலங் கவிர்சடை மேல்வையை மண்சுமந்தோர்" (48) என்பவற்றில் மதுரைத் திருவிளையாடல்களையும், "இயலருகாவணம் சங்கத்திலேறு மிறைவர்" (63) என்பதில் சங்கப் புலவராக இருந்து அத்தலத்தில் தமிழைப் பாதுகாத்ததையும் கூறியிருக்கிறார். "கனகசபை வாணா" (60) என்பதில் சிதம்பரதலத்திலுள்ள பொன்னம்பலத்தைச் சொல்லியிருக்கின்றார்.

92–ஆம்செய்யுளில் "என்பரிவைத்தனு வாக்கிதன்தந்தை" என்பதனால் ஞானசம்பந்தர் முருகக்கடவுளவதாராம் என்னும் கொள்கையை இவ்வாசிரியர் உடையவரென்று தெரிகின்றது.

## 5. பொருளிலக்கண அமைதி.

இந்நூலின்கண் அகப்பொருட்டுறைகளாகவும் புறப்பொருட்டுறைகளாகவும் அமைந்துள்ள செய்யுட்கள் பல. கூழைப்பிரானைக் கிளவித்தலைவராகக்கொண்டுபாடப்பெற்றவை யாவும் புறப்பொருட்கிளவிகளுள் கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தபக்கத்தின் வகையினவாகும். இவ்விருவகையிலும் தலைவன் தலைவி பாங்கி செவிலி கண்டோர் என்பவர்களின் கூற்றுகப் பலதுறைகள் இருக்கின்றன.

தலைவன்கூற்றுக்களுள் வண்டோச்சிமருங்கணைதல் (66), மடலேறத்துணிதல் (72), ஐயம் (84), இடையூறு கிளத்தல் (89) முதலிய துறைகளும், தலைவிகூற்றுக்களுள் சந்திரோபாலம்பனம் (17), கிளிவிடுதூது (43), இரவுநீடுபருவரல் (63), காமமிக்ககழிபடர்கிளவி (82) முதலிய துறைகளும், பாங்கிகூற்றுக்களுள் இரவுக்குறிவிலக்கல் (6), நாரைவிடுதூது (21), வெறிவிலக்கு (49, 93), உலகியலுரைத்தல் (64), தலைவனைகருதல் (36) முதலியனவும், செவிலிகூற்றுக்களுள் உடன்போக்கின்கண் இரங்கல் (38), தலைவியின்நிலைக்கிரங்கல் (4, 15, 95) முதலியனவும், மிக்கோர் ஏதுக்காட்டலாகிய கண்டோர்கூற்றும் (40) வந்துள்ளன. 50 - ஆவது செய்யுளிற் கூடற்சுழிபைப்பற்றிய செய்தி சொல்லப்படுகிறது.

## 6. தமிழ்.

இவ்வாசிரியர் தமிழை, 'இன்றேனனையதமிழ்' (19), 'தென்மலையத்தமிழ்' (37), 'முத்தமிழ்' (42) என்று பாராட்டுவார்.

## 7. அணி அமைதி.

இதன்பால், நிரனிறை பரிவர்த்தனை தன்மைநவிற்சி உவமை உருவகம் சொற்பின்வருநிலை முதலிய அணிகள் ஆங்காங்கே அமைந்துள்ளன.

## 8. உவமைகள்.

உலகவழக்கில் மிக்குவழங்கும் உவமைகள் சிலவற்றை இவர் எடுத்தாளுகின்றார். சிவபெருமானுக்கு ஆமலகக்கனியை உவமிக்கின்றார் (1). "அகங்கனலிற், றுனு காக்கு நிகரா யுருகுவர்" (3), "அனலதன்மேன் மெழுகானதென்னங்கம்" (69), "அக மெழுகினுருகேம்" (96) என்பு

வற்றில் அனலால் உருகும் அரக்கும் மெழுகும், "கானலங் கண்ணீ யுழன்மா னெனவுட் கலங்குவரே" (7) என்பதில் கானலை நீரெனஎண்ணும் மானும், "உலக மெழுமென் குமிழியெய்பார்" (96) என்பதில் நீர்க் குமிழியும் எடுத்தாளப்படுகின்றன. "வெங்கணேபடுபுண், காரங் கடுக்க யமவாதை யுற்றிடுங் காலத்திலே" (71) என்பதில் யமவாதைக்குப் புண்ணுக்கு இடும் காரம் உவமை கூறப்படுகின்றது.

## 9. உலக வழக்கு.

சாதாரணமாக உலகவழக்கத்தில் உள்ள சொற்களும், சொற்றொடர்களும், கருத்துக்களும் இதில் வந்துள்ளன. வருத்தப்படுபவர்கள் தங்களைப் பாவி என்று நொந்துகொள்வதுண்டு. அந்த வழக்கத்தை இதில், "ஒருபாவிபெற்ற அஞ்சம்" (4) என்று செவிலியும், "இனி அந்திபட்டாற் பாவிக்கு மாவிற் குயில்பகை" (5) என்று தலைவியும், "உள்ள முருக வொழியாத பாவி" (97) என்று கவியும் தம்மைக் கூறிக் கொள்ளும் பகுதிகளிற் காணலாம். வருத்தத்துக்குக் காரணமானவர்களையும் பாவி என்று வைவது இயல்பு; அவ்வியல்பு, "படுபாவிமதன்" (57), "பாவிக்கருங்கங்குல்" (68) என்பவற்றில் காணப்படுகிறது. வருத்தமுறுகின்றவர்கள், "இது தலையிலெழுத்து" என்றுசொல்லும் வழக்கு, "என்தலையி லெழுத்தெனும்" (9), "வம்பு லிபித்தா னயனிந்த வொண்டொடிக்கே" (11), "அன்த்தன் விதித்தநிவ்வாறு" (16) என்பவற்றிற் குறிப்பிக்கப்பட்டிருக்கின்றது. சொல்பவருடைய அதரிய முதலியவற்றைப் புலப்படுத்தும் 'அட' என்ற சொல்லை "அடவா ரணமதஞ்" (29) என்றும், வியப்பைத்தெரிவிக்கும் 'அம்மா' என்ற சொல்லை, "மாவை அமா தழைபா லிவர்தா மெய்தவாறு கன்றே" (86) என்றும், மிக்கவருத்தத்தைக்குறிக்கச் சொல்லும் 'சிவசிவ' என்பதை, "சிவசிவ நச்சராவு மிலையோ" (36) என்றும் உலகவழக்கோடு பொருந்த இவ்வாசிரியர் எடுத்தாண்டிருக்கிறார். "சென்றுதான் பெறலே தென்னில், அங்கே ....வில்வேடன்கை யேவைர்தமே" (15) என்பதில் வினாவிடையாக ஒரு கருத்தைச் சொல்லும் உலக இயல்பு புலப்படுகின்றது. "என் செய்தா னேடினனே" (வி. பா.) என்பதில் வில்லிபுத்தூராரும், பிறரும் இங்ஙனம் ஆண்டிருக்கிறார்கள். பலமுறை பேசுவதைக்குறிக்க 'அளத்தல்' (9) என்னும் சொல்லையும், விரும்பி மேற்கொண்ட காரியம்

என்னும் பொருளில் 'பிடிப்பது' (14) என்பதனையும், நேரமில்லாத என்ற பொருளில் 'ஒழியாத' (97) என்பதனையும் இதனுட் காண லாம். அருமந்த, நஞ்சு (நைந்து) முதலிய மரூஉமொழிகள் இதில் இடையிடையே வந்துள்ளன.

## 10. வடசொற்களும் சொற்றொடர்களும்.

இடையிடையே வடசொற்களும் சொற்றொடர்களும் பயின்று வந்திருக்கின்றன. அஞ்சம், அயிராவணம், அநத்தம், நித்தம், பிர சங்கம், வித்துருமம் முதலிய வடசொற்றிரிபுகளும், வடவானலம், வேலாவலயம், பாதாரவிந்தம், விரகானலம், தாதலம், முகாரவிந்தம், சந்த்ரோதயம், மகராலயம் முதலிய வடசொற்றொடர்களும் இதன்கண் காணப்படுகின்றன. கோகிலம் என்ற சொல்லைக் கோகுலம் (8) என்று ஆண்டுள்ளார். இந்த ஆட்சி பரிபாடல் முதலிய பழந்தமிழ்நூல்களிலும் கண்டதாகும். லிபி என்பதிலிருந்து லிபித்தான் (11) என்னும் வினை முற்றை ஆக்கிக்கொண்டிருக்கின்றனர். கிருபை என்பது கிறுபை என ஓரிடத்தில் வந்துள்ளது (43); இங்ஙனம் வரும் வடசொற்றிரிபுமொழி களில் வல்லின றகரத்தைக்கோடல் பழையநூல்களில் எதுகையிலும் பிறவிடங்களிலும் பயின்றுவந்த வழக்காதலின் பிரதியிலுள்ள அச்சொல் அங்ஙனமே பதிப்பிக்கப்பெற்றது.

## 11. அரும்பதங்கள்.

குருக்கும் (32) ஊர்வர், கூர்வர் (44) முகாரவிசை (76) முதலிய புதுப்பிரயோகங்களும் சற்பனை, கற்பனை, இடுவந்தி, முருகல் முதலிய அரும்பதங்களும் இதிற் காணப்படும்.

## 12. போலிகளும் விகாரங்களும்.

திரிபையும் யமகத்தையும் நோக்கிப் போலிகளும் விகாரங்களும் மற்ற அந்தாதிகளில் இருப்பதுபோல இதிலும் வந்துள்ளன. "போனக னஞ்சு" (18), "காலங்கனலம்" (72) என்பவைபோன்ற இடங்களில் தந்நகரத்திற்கு றன்னகரம் வந்திருத்தலும், அதுபோலவே றன்னகரத் திற்குத் தந்நகரம் வந்திருத்தலும், 'திகைக்குப' (73), 'உவமயிலாய'

(77) என்பவை போன்ற இடங்களில் ஐகாரத்திற்கு அகாரமும் யகாரமும் வந்திருத்தலும், 'மாலைபிராவணப்பாகன்' (38), 'அல்லையரும்' (79) என்பவைபோன்ற இடங்களில் யகரத்திற்கு முன்னுள்ள அகரத்திற்கு ஐகாரம் வந்திருத்தலும், அமா (அம்மா), அளி (அள்ளி), அலை (அல்லை), புலி (புல்லி), புனை (புன்னை) என்பனபோன்ற இடைக்குறைச் சொற்கள் வந்திருத்தலும் காண்க. இவைகளெல்லாம் திரிபுயமகங்களை நோக்கி வந்தன என்று கொள்ளற்பாலன.

## 13. பிறநூற் கருத்துக்கள்.

சங்கமருவிய நூற்பிரயோகங்களும் தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைப் பிரயோகங்களும் பிற தமிழ்நூற் பிரயோகங்களும் இந் நூலின்கண் அங்கங்கே அமைந்திருப்பதைக் குறிப்புரையினால் அறியலாம். அவற்றால் ஆசிரியர் பல நூலறிவுடையவர் என்பது விளங்கும்.

இத்தகைய அரிய நூலைக் குறிப்புரையுடன் வெளியிடச்செய்வித்த திருவருளை நினைந்து வழுத்துகின்றேன். இந்நூல், தமிழ்ப் பிரபந்தங்களை விரும்பிப் படிக்கும் அன்பர்களுக்கு மிகவும் இனியதாகத் தோற்றும் என்பதில் ஐயமில்லை.

இந் நூலை முற்றும் பெற்றுப் படிக்கவேண்டுமென்ற ஆர்வத்தோடிருந்த என்னுடைய தமிழாசிரியர் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இதனைப் பார்க்கவில்லையேயென்ற வருத்தம் உண்டாகி என்னை வருத்துகின்றது.

இதனை ஆராய்ச்சிசெய்யும்பொழுதும் பதிப்பிக்கும்பொழுதும் உதவியாக இருந்த அன்பர்களுடைய க்ஷேமத்தைக்குறித்து ஸ்ரீ ஆவுடைநாயகியையும் கூழைப்பிரானையும் பிரார்த்திக்கின்றேன்.

இப்பதிப்பைச் செந்தமிழ்ப்பத்திரிகைவாயிலாக வெளியிடச்செய்வித்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தாரது அன்புடைமை பாராட்டற்பாலது.

சென்னை, 10—3—1934.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

உ

கணபதிதுணை.

# சங்கர நயினார்கோயில் அந்தாதி.

## விநாயகர் காப்பு.

### வெண்பா.

ஞானவர ராசையொடு நாடவருள் சங்கரற்கன்
பான வரராசை யந்தாதி—தானவில
வெஞ்சமரு வந்தவடி வெங்கரடத் தந்திமுகன்
கஞ்சமரு வந்தவடி காப்பு.

(குறிப்புரை.) ஞானவரர் நாட-சிவஞானத்தையுடைய பெரியோர் நாடும்படி. வரராசை - சங்கரநயினார்கோயில். சங்கரற்கு நவில; நவிலுதல் - சொல்லுதல். சங்கரனென்பது இத்தலத்தில் எழுந்தருளியுள்ள ஸ்வாமியின் திருநாமம். வெஞ்சமரை உவந்த. வடி - மதம்பெருகுகின்ற. கரடம் - மதம் பாயும் சுவடு. கஞ்சம் மரு வந்த - தாமரையின் வாசனை பொருந்திய.

## நூல்.

1. பார்தந்த நான்மறை யோன்பணி ராசைப் பரமவிண்ணு
ளார்தந்த மாமல கக்கனி யேயென் றகத்துள்வைக்கும்
நேர்தந்த மாமருங் காவுடை நாயக நீள்புழைக்கை
ஓர்தந்த மாமத யானைதந் தாயென் றுரைநெஞ்சமே.

(கு-உரை.) ராசை - இத்தலத்தின் திருநாமம். தம் தம் - தங்கள்தங்களுடைய. ஆமலகக்கனி-நெல்லிக்கனி; "சிந்தித்தெழுவார்க்கு நெல்லிக்கனியே." "அங்கை நெல்லியின் பழத்திடை யமுதே" (தே. சுந்தர.) விண்ணுளார் அகத்தின் வைக்கும். தந்து நேர் அம் மருங்கு - நூலைப்போன்ற அழகிய இடையையுடைய; நேர் நுண்மையுமாம். ஆவுடைநாயக - ஆவுடையம்பிகையின் நாயகரே; "ஆவுடை நாயகனே" (20) என்பர் பின். ஓர்தந்த மாமதயானை - விநாயகர் தந்தாய் - தந்தையே.

நெஞ்சமே உரை.

2. உரைக்கடங் காதண்ண லேகயல் பாய வுடைந்தகஞ்ச
விரைக்கடங் காத வயல்பாயுங் கூழைபில் வித்தகர்வெண்
டிரைக்கடங் காதரத் தோடயின் றோர்பொற் சிகரநெடு
வரைக்கடங் காத வளர்முலை யார்கண் மருட்டியதே.

(கு-உரை.) உரைக்கு அடங்காது; உரைக்கு - சொல்லில். அண்ணலே யென்றது பாங்கனைநோக்கி. கஞ்ச விரைக் கள் தங்காது அ வயல் பாயும்; அ - அழகு. கூழை - இத்தலத்தின் திருநாமம். வெண்டிரைக்கடலை; கடு - விஷம். அங்கு ஆதரத்தோடு. வரை - மலையின்பக்கத்தில். கடம் காத - குடத்தைக் காதுதற்கு.

அண்ணலே, தலைவியின் கண்கள் என்னை மருட்டினமை உரைக்கு அடங் காது.

இது, தலைவன் பாங்கனுக்கு உற்றதுரைத்தல்.

"விரித்துச் சொலற்கென் றனுன்முடியாதன்ப..............வரிக்கண்மின் னாங் குசத்தா லதனை மடக்கியதே" (கோடீசுரக்கோவை, சகூ) என்பது இதனோடு ஒப்பிடற்பாலது.

3. தேனா கரக்குளிர் மெய்பூச் சொரிந்தயன் செங்கணெடு
மானா கரக்கு மதியணிந் தோய்வர ராசைவெள்ளை
ஆனா கரக்குன் றுரித்தோயென் றேத்தி யகங்கனலிற்
றானா காக்கு நிகரா யுருகுவர் தஞ்சமென்றே.

(கு-உரை.) தேன் ஆகரம் - தேனுக்கு இருப்பிடமாகிய. அயனும் நெடு மாலும் நாகரும் (தேவரும்): எழுவாய். அக்கு மதி அணிந்தோய்; அக்கு - உருத்தி ராக்கம்; சங்குமணியுமாம். வெள்ளை ஆனு; ஆன் - இடபம். கரக்குன்று - யானையை. அகம் - மனம். கனலில் ஆகு அரக்கு நிகராய் - நெருப்பைச் சார்ந்த அரக்கை ஒத்து; தான்: அசைநிலை. தஞ்சம் - பற்றுக்கோடு.

அயன்முதலியோர் ஏத்தித் தஞ்சமென்று உருகுவர்.

4. தஞ்ச மளிக்க வருகூழை நம்பர்கைத் தாமரையால்
நஞ்ச மளிக்களம் வைத்தருள் வோர்நறை பூத்தமலர்ப்
பஞ்ச மளிக்கண் மருவா சினியொரு பாவிபெற்ற
அஞ்ச மளிக்கண் டுயிலாதெவ் வாறுய்யு மாவியுமே

(கு-உரை.) தஞ்சம் அளிக்க - பற்றுக்கோட்டை அளித்தற்கு. நஞ்சம் கைத்தாமரையால் அள்ளி - விடத்தைத் திருக்கரத்தால் அள்ளி. களம் - கண்டத்

தில். மலர்ப் பஞ்சு அமளிக்கண் - மலரையும் பஞ்சையும் உடைய படுக்கையில். அஞ்சம் - அன்னம் போல்வாள். நற்றாய்க்கும் தனக்கும் உள்ள ஒற்றுமை பற்றிப் பாவி பெற்ற அஞ்சமென்றாள்; "அணங் கென்வயிற்றிற், பிறந்திருந் தாள்"(95) என்பர் பின். அளிக்கண் - வண்டைப்போன்ற கண்கள். துயிலாது - துயிலமாட்டாள். ஆதலால் அவள் ஆவி எவ்வாறு உய்யும்? இது கூழைநாயகரையே கிளவித் தலைவராகக்கொண்டு கூறியது.

கூழைநம்பர் மருவார்; அஞ்சம்போல்வாள் அளிக்கண் துயிலாள்; அவள் ஆவி எவ்வாறு உய்யும்?

இச் செய்யுள் செவிலிகூற்று.

5. ஆவிக்கு மாவி யனையமின் னேயினி யந்திபட்டாற்
பாவிக்கு மாவிற் குயில்பகை வேய்பகை பாய்பகழிப்
பூவிக்கு மாவில் பகையா ருரைப்பர்பைம் போதருந்திக்
கோவிக்கு மாவி புடைசூழங் கூழைக் குழகருக்கே.

(கு-உரை.) ஆவிக்கும் ஆவி அனைய - உயிர்க்கும் உயிரைப் போன்ற; உம்மை: உயர்வுசிறப்பு. மின்னேயென்றது தோழியை. அந்தி பட்டால் - அந்திக் காலம் தோன்றுமாயின்; படுதல் - தோன்றுதல். பாவிக்கு - பாவியாகிய எனக்கு. மாவிற் குயில் - மாமரத்திலுள்ள குயில். வேய் - புல்லாங்குழல். பகழிப் பூ - அம்புகளாகிய பூக்கள். இக்கு மா வில் - கரும்பாகிய பெரிய வில். போது அருந்தி - பூக்களை உண்டு. கோ - பசுக்கள். விக்கும் - விக்கிக்கிடக்கும். ஆவி - குளம். குழகர்: 6, 29; "குழகன் குடமூக்கு" தே.

கூழைக் குழகருக்கு யார் உரைப்பார்.

இது தலைவி கூற்று.

6. குழகரி மாசலக் கொம்பொரு பாகங் குடியிருக்கும்
அழகரி மாலயன் போற்றிய கூழை யமலர்வெற்பின்
மழகரி மான வருமண்ண லேநின் று மண்டுகொலை
பழகரி மாவுண் ணிரவிங்கு நீவரல் பான்மையன்றே.

(கு-உரை.) குழகர் - இளமைப்பருவத்தையுடையவர். இமாசலக்கொம்பு - உமாதேவியார். அழகர். இந்த மாலும் அயனும் போற்றிய. மழ கரி மான - இளமையையுடைய யானையை ஒப்ப. கொலை பழகு அரி - கொலையிற் பழகிய சிங்கமானது. மா உண் இரவு - யானையை உண்ணும் இரவில். பான்மை - முறைமை.

இது பாங்கி தலைவனை இரவுவரல் விலக்கல்.

7. பானலங் கண்ணி யொருபாகர் முக்கட் பரமர்மலர்த்
தேனலங் கண்ணிறை தென்கூழைச் சங்கரர் செய்யகழல்
மேனலங் கண்ணி யுருகா ரரும்புனல் வேட்டுவெறுங்
கானலங் கண்ணி யுழன்மா னெனவுட் கலங்குவரே.

(கு-உரை.) பானல் அம் கண்ணி - கருங்குவளைமலர்போன்ற அழகிய கண்ணையுடைய உமாதேவியார். மலர்த்தேன் - பூக்களிலுள்ள தேனானது. அலம் கண் நிறை - கலப்பை சென்ற இடத்தே நிறைந்திருக்கும்; "மதுவானிறைந்த தேக்க மலத்து வழியே பாக்குந் திருப்புகலூர்" (திருப்புகலூரந்தாதி, க.) கழல்மேல் நலம் - திருவடிக்கண்ணுள்ள இன்பத்தை; மேல் - இடம். கண்ணி - கருதி. வேட்டு - விரும்பி. கானல் அங்கு அண்ணி - பேய்த்தேரையுடைய அவ்விடத்தை அடைந்து. அலக்கணெனற்பாலது திரிபுநோக்கி மெலிந்து நின்றது. இவ்வாறே பின்வரும் வேறுபாடுகள் பலவற்றையும் திரிபுநோக்கி வந்தனவென்று கொள்க.

உருகார் கலங்குவர் என்க.

8. கலங்கு தலைச்செய் தருள்வேல் விழிவளை கந்தரங்கோ
குலங்கு தலைச்சொன் முகிலோதி நூலிடை கோங்கமுலை
மலங்கு தலைப்படும் வாவிகள் சூழ்வர ராசையெந்தை
இலங்கு தலைக்கண்ணி சூடும் பிரான்வெற் பிளங்கொடிக்கே.

(கு-உரை.) கலங்குதலைச் செய்து அருள் விழி வேல் - முன்னர்க் கலங்கு தலைச்செய்து பின்னர் அருளுகின்ற விழிகள் வேல்போல்வன; "இருநோக் கிவ ளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கொன் றந்நோய் மருந்து" (குறள், கOகக); "மாண்பி னஞ்சு மமிர்தமுமே போல்குணத்த பொருகயற்கண்" (சீவகசிந்தாமணி, கசுஎ); "பிணியு மதற்கு மருந்தும் பிறழப் பிறழ்பின்னும், பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே" (திருச்சிற்றம்பலக் கோவையார், ரு.) கந்தரம் வளை - கழுத்து வளைபோல்வது; வளை - சங்கம். ஓதி - கூந்தல். குதலைச்சொல் கோகுலம்; கோகுலம் - குயில்; "கோகுலமாய்க் கூவுநரும், ஆகுல மாகுநரும்" (பரிபாடல், கூ: சுரு-சு); "மாகுல வல்லியின் மஞ்ஞை யாடல்போற், கோகுல மார்தருக் குழாத்தின்", "கோகுலப் பறவையுங் கொல்லு மோவென்பான்" (கந்தபுராணம், திருநாட்டுப்படலம், சுஉ; குமார புரி. சஅ.) கோங்கம் - கோங்கரும்பு. மலங்கு தலைப்படும் - மலங்குமீன்கள் கலந்திருக்கின்ற. தலைக்கண்ணி - தலைமாலையை; "தலைமாலை தலைக்கணிந்து" (தே); "விரிசடைமேற், நிரைவளர் கங்கை நுரைவளர் தீர்த்தஞ் செறியச்

செய்த, கரைவளர் வொத்துள் தாற்சிர மாலையெங் கண்டனுக்கே" (போன் வண்ணத்தந்தாதி, உஅ.) பிரான் வெற்பு - சங்கராத மலையிலுள்ள.

இது தலைவன் பாங்கனுக்குத் தலைவியின் இயல் இடம் கூறல்.

பி-ம். "வாவிக ளார்வ ராசை"

9. இளந்தென் றலைவட வானல மென்னு மிகன்மதன்கா
களந்தென் றலையமன் காணென வேங்குங் கடலகடு
பிளந்தென் றலைவந் தழிப்பதெந் நாளெனும் பேதையிவ்வா
றளந்தென் றலையி லெழுத்தெனுங் கூழை யருளம்பொருளே.

(கு-உரை.) இளந்தென்றலை - இளைய தென்றற்காற்றை. வடவானலம் என்னும் - வடவைத்தீ என்று சொல்லுவாள். மதன்காகளம் - குயிலை; காகளம் - காளம். தென்தலை யமன் காண் என ஏங்கும்-தென்பாலுள்ள எமனென்று ஏங்கு வாள். கடல் அகடு - கடலின் நடுவை. என்று - சூரியன். அல்லை - இருளை. என்று பிளந்து வந்து அல்லை அழிப்பது எந்நாள் என்பாள். பேதை - தலைவி; எழுவாய். அளந்து - இடைவிடாமற் பேசி; வழக்கு. என் தலையில் எழுத்து - இத்துன்பத்திற்குக் காரணம் என் தலையெழுத்தே. எனும் - என்று சொல்லு வாள்.

இது பாங்கி கூற்று.

பி-ம். "பிளந்தென் றலைவந் துதிப்பதெந் நாள்"

10. அரும்பா தகஞ்சன னந்தொறுஞ் செய்துவ தன்றியுன்னை
விரும்பா தகஞ்சமன் வீட்டுவி டான்கதி வீடருள
வரும்பா தகஞ்சமும் வாய்க்குங் கொலோவிம வானளித்த
கரும்பா தகஞ்சலி யின்ஞோர்செய் கூழைக் கறைக்கண்டனே.

(கு-உரை.) பாதகம் - பாதகத்தை. அகம் உன்னை விரும்பாது; அகம் - மனம். சமன் - யமன். கதியாகிய வீடு - முத்தியை. அருள - அருளுதற்கு. பாதகஞ்சம் - தேவரீருடைய திருவடித்தாமரைகள். இமவான் அளித்த கரும்பு - உமாதேவியார்; "வாமக்கரும்பு மனைக்கரும்பா மாரூரர்" (திருவாரூர்நான்மணி மாலை, கக.) தகு அஞ்சலியை.

கூழைக் கறைக்கண்டனே! பாதகஞ்சம் வாய்க்குங்கொலோ.

பி-ம். "வீடளிக்க"

11. கறையரா வம்புலி சூடிய கூழைக்கங் காளர்சது
மறையரா வம்புலி வாழ்புர மாய்த்தவர் மங்கைபங்கர்
முறையரா வம்புலி போற்றீச ரென்று மொழிந்தவர்பால்
உறையரா வம்பு லிபித்தா னயனிந்த வொண்டொடிக்கே.

(கு-உரை.) கறை அரவு - விஷத்தையுடைய பாம்பையும். அம்புலி - சந்திரனையும். சதுமறையர் - நான்குவேதத்தை அருளிச்செய்தவர். அவம் புல்லி வாழ் புரம் - வீண்செயலை மேற்கொண்டு வாழ்ந்த திரிபுரங்களை; உடைய வரதுதொழில் உடையவற்றின்மேல் ஏற்றப்பட்டது. அரவம் முறை - முழக்கத்தையுடைய வேதங்களும்; முறை - வேதம்; "மும்முறையாலும் வணங்கப் படுகின்ற முக்கணக்கன்" (பொன்வண்ணத்தந்தாதி, அஎ); முறை - நூலுமாம்; "இறைநில மெழுதுமு னிளைய பாலகன், முறைவரை வேனென முயல்வ தொக்குமால்" (கந்தபுராணம், அவையடக்கம், ௧.) புலி - வியாக்கிரபாதரும். என்று மொழிந்தவர் - என்று துதிப்பவர். அர - அரனே. வம்பு லிபித்தான் - பழிமொழியைப் பெறும்படி எழுதினான்; "பெண்கொடியார், வெய்யவம்பு" (22) என்பர் பின்; "வம்புச்சொற்றிக்குமார னைவார்" பழமலையந்தாதி, அ.

அயன் இவ்வொண்டொடிக்கு வம்பை லிபித்தான்.

இது பாங்கிகூற்று.

12. தொடிகைக்கு நீங்குந் துகிலிழுந் தேங்குந் துயரினயர்
வடிகைக்கு நீலி யனையிவ ளாவி வலியவிடும்
படிகைக்கு நீபெண் பழிகைக்கொ ளாதுகண் பார்த்தருளெல்
விடிகைக்கு நீள்பொழில் சூழ்வா ராசையில் வித்தகனே.

(கு-உரை.) தொடி - வளையல். கைக்கு - கையினின்றும்; வேற்றுமை மயக்கம். நீங்கும் - நீங்குவாள். ஏங்கும் - ஏங்குவாள். துயரின் அயர்வள். திகைக்கும் - திகைப்பாள். நீலியாகிய அன்னையானவள். ஆவியை வலிய விடும்படி அன்னை இவளைக் கைக்கும்; கைக்கும் - வெறுப்பாள். எல் - இராத்திரி. விடிகைக்கு - விடிதற்பொருட்டு. எல் விடிகைக்கு நீ கண்பார்த்தருள். நீ அருளாவிடின் இராப்பொழுது யுகமாக வளருமென்றபடி; "சேல்விழிகள், பெய்யவம் போருக மான திராவெனும்" (22) என்பர் பின்.

இது பாங்கி கூற்று.

13. வித்துரு மத்தனி மேனியர் கூழை விமலர்கக
னத்துரு மத்தர் சிவசங்க ரேசர்நண் ணார்விடுத்த
சத்துரு மத்த கயமுரித் தோர்மலர்த் தாட்பணிசேர்
பித்துரு மத்தனை யோவிட் டியமன் பிடிப்பதின்றே.

(கு-உரை.) வித்துருமம் - பவழத்தைப்போன்ற. ககனம் தருமத்தர் - ஆகாயத்தில் உள்ள கற்பகதருவைப்போன்றவர்; துருமம் - மரம்; "கருவேயென் கற்பகமே", "கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னே", "கடிக்குளத்துறையுங் கற்பகத்தை" (தேவாரம்); "கற்றவர் விழுங் குங் கற்பகக்கனியை" (திருவிசைப்பா.) சத்துரு மத்தம் கயம் - பகைமையை யும் களிப்பையும் உடைய யானையை; மத்தம் - மதமுமாம். விடுத்த கயமென இயைக்க. பித்து உரு மத்தனை - பித்தையே உருவமாகக்கொண்ட அடியேனை; மத்தம் - வெறி. ஓவிட்டு - முழங்கி; ஓலம்: கடைக்குறை.

14. பிடிக்கும் பிடிமருங் கோர்பாகன் கூழைப் பிரான்கமல
அடிக்கும் பிடிகம் பரநல் தும் வேல்விழி யாலுயிரைக்
குடிக்கும் பிடிநடை யாராசை தீர்க்குங் குறித்ததெலாம்
முடிக்கும் பிடிப்ப தெமக்கெந்த நாளினு முன்னிற்குமே.

(கு-உரை.) பிடிக்கும்பிடி - கைப்பிடிபோன்ற. மருங்கு - இடை; "ஒல்குபு நுடங்கு மொருபிடி நுசுப்பினர்" (பெருங். உ.உ: உகரு); "ஒருபிடி நுசுப்பினாளை" (சீவகசிந்தாமணி, சுகஉ); "இடையு நடையு மொருபிடி யென்ன வெழுதவனே" (சீகாழிக்கோவை, கசச.) கும்பிடானது இகத்தை யும் பரத்தையும் நல்கும். குடிக்கும்: பெயரெச்சம். நடையார்பாலுள்ள ஆசை யைத் தீர்க்கும், பிடிப்பது - யாம் விரும்புவது.

கும்பிடு நல்கும், தீர்க்கும், முடிக்கும், முன்னிற்கும்; எமக்குப் பிடிப்பது அது.

15. மூன்னிலங் கேசன் புயமடர் கூழைமுக் கண்ணர்விண்பூ
மன்னிலங் கேசவன் றேடரி யார்மலர்த் தாள்பணியத்
தன்னிலங் கேசஞ் சரியச்சென் றுள்சென்று தான்பெறலே
தென்னிலங் கேசரி போகவில் வேடன்கை யேவைந்துமே.

(கு-உரை.) இலங்கேசன் - இராவணனது. விண் பூமனும் நிலம் கேசவ னும் தேடரியார்; பூ மன் - பிரமன். தன்னில் - தானாகவே. கேசம் - கூந்தல். ஏது என்னில் - யாது என்றால். சரி போக - கைவளை நீங்க; சரி: வழக்கு. பெறல் ஏ ஐந்தமே.

இது செவிலி கூற்று.

16. ஐயான னத்தன் வராசை வாழு மமலன்மலர்க்
கையான னத்தன் பணிசங்க ரேசன் கடுக்கையருள்
செய்யான னத்தன் விதித்ததிவ் வாறு திகழ்பசலை
மெய்யான னத்தன்மை சற்றுமெண் ணாரிந்த மெல்லியரே.

(கு-உரை.) ஐ ஆனனத்தன் - ஐந்து திருமுகங்களையுடையவர். கை ஆன நத்தன் - கையின்கண்ணேபொருந்திய சங்கத்தையுடைய திருமால். அன்னத்தன். விதித்தது இவ்வாறு. மெய் பசலை ஆன - மெய்யின்கண் பசலை பரந்தன. நத்தன்மை - நம் தன்மையை; வலித்தல் விகாரம்; நத்து அன்மையெனப் பிரித்துத் தலைவன் விருப்பமில்லாமையையெனப் பொருள்கொள்ளுதலுமாம்.

இது தலைவிகூற்று.

17. மெல்லிய ராக வரிவண்டு சூழ்குழன் மேருமலை
வல்லிய ராக வசைபுகல் வார்முன் மதகளிறு
சொல்லிய ராகவ னோர்கூழைச் சங்கரர் தூங்கவெற்பிற்
புல்லிய ராக மதிவிழுங் காமலென் போனதுவே.

(கு-உரை.) ராகம் - இசையையுடைய. வல்லி - கொடிபோல்வாய். அராக வசை - விருப்பமில்லாததாகிய பழிமொழியை. மதகளிறு - கசேந்திரன். ராகவன் - இராமர்; இது திருமாலென்னுந்துணையாய்நின்றது; 36, பார்க்க. ஓர் - உணருகின்ற. புல்லிய ராகு - பரிசித்த ராகுவென்னும் பாம்பானது. அ மதி - அந்தச் சந்திரனை.

இது, சந்திரோபாலம்பனம்; தலைவிகூற்று.

18. போனக னஞ்சு புலித்தோ லுடைகொண்ட புன்னைவனத்
தானக னஞ்சு பணியாத ராவணன் றன்னையடர்
கானக னஞ்சு கணையா ளியைவென்ற கண்ணனெனும்
ஆனக னஞ்சுருண் மெல்லோதி யாள்வா ராசையின்றே.

(கு-உரை.) போனகம் நஞ்சு. புன்னைவனத்தான். அகம் நஞ்சு - மனம் ஐந்து. அடர்கால் நகன் - அடர்த்த கால்நகத்தை யுடையவர். அஞ்சு கணையாளியை - மன்மதனை. கனம் ஆன - மேகத்தை ஒத்த.

இதியாள் வராசையில் இன்று புன்னைவனத்தான், கால்நகன், கண்ணனென்பானென்க.

இது பாங்கிகூற்று.

19. இன்றே னனைய தமிழ்வா ராசையி லெங்களருட்
குன்றே னனைமலர்க் கோதைபங் காபவக் கூர்கடல
சென்றே னனைய நினதருண் மாரித் திவலைபட
நின்றே னனைய வெனக்கெந்த நாள்வந்து நேர்படுமே.

(கு-உரை.) இன் தேன் அனைய - இனிய தேனை ஒத்த. அருட்குன்றே
நனை - தேன்; நனைமலர்-போதுமாம்; இது மொட்டருமலரென்றும் முகைமல
ரென்றும் செய்யுட்களில் வழங்கும். கூர் - மிகுந்த; பவக்கடல். சென்றேன் - முழு
கினேன். அல் னைய - அடியேனுடைய அஞ்ஞானம் கெடும்படி; அல் - இருள்.
அருள் மாரி - கருணைமழையின். நனைய - நனையும்படி.

அடியேனுக்கு அருள்மாரியின் திவலைபடவும் நனையவும் எந்தநாள் வந்து
கைகூடுமென்க.

20. படுத்திருக் குந்தளிர்ப் பாயலை நீங்கிப் பதைபதைத்து
வடுத்திருக் குந்துயி லாளயி லாளன்ன மாதுநல்லாள்
அடுத்திருக் குங்கண் டறியா நினதுப தாம்புயத்தாள்
நடுத்திருக் கும்பர னோராசை யாவுடை நாயகனே

(கு-உரை.) படுத்திருக்கும் - பரப்பியிருக்கும். பாயலை - படுக்கையை.
வடு திருக்கு - மாவடுவைப்போன்ற கண்கள். அன்னம் அயிலாள். இருக்கும்
(வேதமும்) அடுத்துக் கண்டறியாத. நினது பதாம்புயத்தாள் - நின் திருவடித்
தாமரையின்கண்ணே உள்ளாள்; ஏதேனும் ஒன்றைக் கருதி அதனைப் பெறு
தற்கு வரங்கிடத்தல் இத்தலத்தில் வழக்கமாதலின், 'நினது பதாம்புயத்தாள்'
என்றாள். நடுத்து இருக்கும் - நடுங்கியிருப்பாள்; நடுத்தென்பது நடுநடுத்து
என அடுக்கி வருவதும் உண்டு; "நாமவேற் கண்ணு ணடுநடுப்ப வாரலோ"
திணைமாலைநூற்றைம்பது, உ௫.

ஆவுடைநாயகனே! நல்லாள் துயிலாள்; அயிலாள்; பதாம்புயத்தாள்; நடுங்கி
யிருப்பாள்; இவளுக்கு அருள் செய்க என முடிக்க.

இது பாங்கிகூற்று.

ா யனங்கன் பொருபோ தெரித்திடு நெற்றிவிழி
ரா யனக்கன்பு செய்கூழைச் சங்கரர்க் காருரைப்பார்
நாரா யனங்க ளிவள்போ னடந்து நடைபழகும்
சீரா யனங்கள் குலதீப மால்கொண்ட செய்தியையே.

(து-உரை.) அனங்கன் - மன்மதன். நெற்றிவிழியார். ஆயன் - இடையர் குலத்தில் வளர்ந்த திருமால். சங்கரர்க்கு ஆர் உரைப்பார். நாராய் - நாரையே. அனங்கள் - அன்னப்பறவைகள். சீராய - சிறப்பமைந்த. நங்கள் குல தீபம் - எங்கள் குலத்திற்குத் தீபம்போன்றவளாகிய தலைவி.

நாராய்! செய்தியைச் சங்கரர்க்கு ஆர் உரைப்பார்.

இது நாரைவிடுதூது.

22. செய்யவம் போருக மென்முலை மீதிரு சேல்விழிகள்
பெய்யவம் போருக மான திராவெனும் பெண்கொடியார்
வெய்யவம் போருக மூவெயின் மேன்மக மேருவளைத்
தெய்யவம் போருகந் தாய்கூழை வாழ்சங்க ரேசுரனே.

(து-உரை.) செய்ய - சிவந்த; வயலின்கணுள்ள என்றுமாம். சேல்விழிகள் அம்பு (நீரைப்) பெய்ய. இரா ஓர் உகம் ஆனது; உகம் - யுகம். என்னும் - என்பாள். பெண்கொடியார வெய்ய வம்பு ஒருக - அயல்மகளிர் கூறும் வெவ்விய பழிமொழியை உணர்க. எய்ய - எய்வதற்கு. அம் போர் - அழகிய போரை.

சங்கரேசுரனே! ஒருக.

இது பாங்கிகூற்று.

23. சுராசை யால்வந் தனுதினம் போற்றுந் துணைப்பதத்தார்
வராசை யாவுடை மாதுபங் காளர் வணங்கியசெங்
கராசை யாவு மொழித்தருள் கூர்கறைக் கண்டர்கங்கா
தராசை யாடை யுடையாரென் றூல்வினை தானறுமே.

(து-உரை.) சுரர் - தேவர்கள். துணைப்பதத்தார் - இரண்டு திருவடிகளை யுடையார் வாராசையில் எழுந்தருளிய; வாராசை - இத்தலத்தின் திருநாமம். வணங்கிய செங்கரர் - வணங்கிய செவ்விய கரத்தையுடைய அடியார்களின்,

ஆசை யாவும் - குற்றம் எல்லாவற்றையும்; ஆசு - குற்றம். கங்காதரர். ஆசை ஆடை - திக்காகிய ஆடையை.

பி - ம். "உடையாரென் றீவினை"

24. அறுகா ரரவணி தென்கூழை வாழு மமலர்முன்னங்
குறுகா ரரண மெரித்தோர் பதமலர்க் கோகனகம்
பெறுகா ரரவத் திரைபோற் கலங்குமென் பேதைநெஞ்சே
மறுகா ரரமன்ன வார்குழற் கூர்விழி மாதரையே.

(து-உரை.) அறுகு ஆர் (ஆத்தி) அரவு அணி. குறுகார் அரணம் - பகைவருடைய மதில்களை. எரித்தோரது. பதமலர்க்கோகனகம் - திருவடித்தாமரைமலர்களை. பெறு - பெறுவாயாக. கார் அரவத் திரைபோல் - கரிய முழக்கத்தையுடைய (கடலின்) அலைகளைப்போல். மறு - மறுப்பாயாக. காரன்ன குழலையும் அரமன்ன விழியையும் உடைய மாதரை; நிரனிறை.

நெஞ்சே! பதமலர்க்கோகனகத்தைப் பெறு; மாதரை மறு என்க.

பி-ம். "திரைபோன் மயங்கும்"

25. மாதரை யம்பர மாலயன் றேடு மணிமுடிப்பொற்
பாதரை யம்பர நல்குதென் கூழைப் பதியுகந்த
நாதரை யம்பா மைவிழி பாகரை நான்றொழுதிப்
போதரை யம்பரம் போய்வளை போய்க்கண் பொருந்திலனே.

(து-உரை.) மா தரை - பெரிய பூமி. அம்பரம் - ஆகாயம். ஆகாயத்தில் அயனும், தரையில் அரியும் தேடும்; எதிர்நிரனிறை. அம்பரம் - அழகிய முத்தியை. அம்பு அரம் மை விழி - அம்பையும் அரத்தையும் போன்ற மையெழுதப்பட்ட விழிகளையுடைய ஆவுடைநாயகி. இப்போது தொழுது. அரை அம்பரம் போய் - இடையிலுள்ள ஆடை நழுவப்பெற்று. வளை - கைவளைகள். கண்பொருந்திலன் - துயிலாதவளானேன்.

சங்கரலிங்கப்பெருமானை அடியேன் தொழுது அம்பரம்போய் வளைபோய்க் கண் பொருந்திலனென்க.

இது தலைவி கூற்று.

26. பொரவியந் தாஞெலி பொங்கவில் வேள்வரும் போதுநின்னைப்
பாவியந் தாதகி கேட்குமென் பேதைகண் பார்கருணு
காவியந் தாதரி யாநின்ற பேர்நின் கமலபதத்
திரவியந் தாவென நல்குந்தென் கூழைச் சிவக்கொழுந்தே.

(கு-உரை.) பொர - போர்செய்தற்கு. இயம் ஒலி பொங்கும்படி; இயம் - வாத்தியம். தான்: அசைநிலை. நின்னைப் பரவி - நின்னைத் துதித்து. அம் தாதகி கேட்கும் - அழகிய ஆத்திமாலையைக் கேட்பாள்; என் பேதை கேட்பாள். கருணகர! வியந்து ஆதரியாநின்றபேர் - அன்பர்கள். பதத் திரவியம் தா என - பாதமாகிய பொருளை அருளிச் செய்யவேண்டுமென்று கேட்ப.

கருணகர! சிவக்கொழுந்தே! கண்பார்.

இது பாங்கிகூற்று.

27. கொழுந்தா மதிக்குழ விக்கூற்ற மாவியைக் கொள்ளைகொள்ள
எழுந்தா மதிக்குங் கொலோவர ராசையெந் தாயிதழிச்
செழுந்தா மதிக்குடை யாய்கலை போய்வளை போய்த்தியங்கி
அழுந்தா மதிக்குநின் னம்புய மாலை யணங்கினுக்கே.

(கு-உரை.) கொழுந்து ஆம்; மதிக்குழவியாகிய எமன்; "குருக்குங் கலாமதிக் கீற்றுவெங் கூற்றம்" (32) என்பர் பின். எழும் - எழாநிற்கும். இதழித் தாம-கொன்றைமாலையையுடையாய். திக்கு உடையாய்; உடை - ஆடை. அழும் - அழுவாள். தா - தந்தருள்வாயாக. மதிக்கப்படுகின்ற நின் அம்புயமாலையை.

வரராசை எந்தாய்! தாம! திக்குடையாய்! அணங்கினுக்கு நின் மாலையைத் தா.

இது பாங்கி கூற்று.

28. கௌர வாசனன் சேயூருந் தென்றல்கிட் டாதுமணிச்
சாளர வாச லடையா தனுமொரு சற்பனைகங்
காளர வாச மலர்ப்பதத் தோரெனக் கற்றவரை
ஆளர வாச மெனராசை வந்த வருட்கடலே.

(கு-உரை.) கேள் - கேட்டருள்வாயாக. அரவாசனன் சேய் - மன்மதன்; அரவாசனன்: "இருந்தாற் சிங்காசனமாம்......அணையாந் திருமாற் கரவு" (திவ். முதற்றிருவந்தாதி, ருஉ); "இருப்ப தனந்தனி லெண்ணவில் வைகுந்தத் தென்பர்" (திருவேங்கடத்தந்தாதி, கஎ.) கிட்டாது - அணுகாதபடி. சாளர

வாசலை அடையாததும். சற்பனை - வஞ்சனை; "இலநெறி சற்பனையே யிவ ருரை சற்பனையே" (அருணைக்கலம்பகம், எசு.) அ வாசம் மலர்ப்பதத்தார்; அ - அழகிய. என - என்று சொல்லுதற்கு. ஆள் அர - ஆண்டருள்கின்ற அரனே. வாராசையை வாசமென எண்ணி வந்த; வாசம் - இருப்பிடம்; "இய லக ஞக வனமென வாழு மிறைவ" (80) என்பர் பின்.

அர! அருட்கடலே! கேள்.

இது தலைவிகூற்று.

29. கடவா ரணமுரித் தோன்வா ராசையிற் கண்ணுதல்வெண்
குடவா ரணமென் குழைக்கா தழகன் குழகனடி
தடவா ரணமுடி யானளித் தான்மலர்த் தாமமினி
அடவா ரணமத ஞபார்க்க லாமுன தாண்மையுமே.

(கு-உரை.) கடவாரணத்தை; கடம் - மதம். வெண்குட வாரணம் - வெண் மையாகிய குடம்போன்ற சங்கம்; "குடவளைக்குலம்" (நைடதம், நகரப். க.) அடி - அடியை. தடவு ஆரணம் முடியான் - தடவுகின்ற வேதத்தின்முடியை யுடையவர். மலர்த்தாமத்தை அளித்தான். அட வா - அடுதற்கு வருவாயாக; அட என்பதனை முன்னிலையாக்கி இகழ்ச்சிக்குறிப்பாகக் கொள்ளுதலுமாம். ரண மதனு - போரைச்செய்கின்ற மன்மதனே; ரணம் - யுத்தம்; "ரணவேள்" (98) என்பர் பின்.

சங்கரேசன் மலர்த்தாமத்தை அளித்தான்; மதனு! அடுதற்கு வா. வந்தால் உன் எண்ணம் பலியாதென்றபடி.

இது தலைவிகூற்று.

30. மேகத் தளவு குழல்வே லிணைவிழி மென்றளிரின்
ஆகத் தளவு நகைமாரை யான்விட் டகன்றுபொழின்
மாகத் தளவுயர் சீராசை நாதர் மலர்ப்பதத்திற்
போகத் தளவுள மெந்நா ளெனக்குப் பொருந்துவதே.

(கு-உரை.) மேகத்து அளவு குழல் - மேகத்தின் இயல்பே கூந்தல். விழி வேல். ஆகம் - உடம்பு. தளவு நகை - முல்லையரும்பைப்போன்ற பற்கள். குழலை யும் விழியையும் ஆகத்தையும் நகையையும் உடைய மகளிரை யான் விட்டகன்று. பொழில் - சோலையானது. மாகத்தளவு - ஆகாயம் வரையில். போகத் தள்ள - போகும்படி செலுத்துதற்கு. எனக்கு உள்ளம் பொருந்துவது எந்நாள்.

நகையாரை விட்டகன்று மலர்ப்பதத்தில் யான் போகும்படி என்னைச் செலுத்துதற்கு எனக்கு உள்ளம் வயமாவது எந்நாளென இயைக்க.

31. பொருந்தந்தி யானனன் றந்தைதென் கூழைப் புனிதனென்றும்
இருந்தந்தி யான மியற்றுநல் லோரித யாரவிந்தம்
திருந்தந்தி யாக னிதழிநல் காளெங்கள் செய்யகுலக்
குருந்தந்தி யாகங் கொடுத்தா ளிருகைக் குருகையுமே.

(கு-உரை.) பொரும் தந்தி ஆனனன் - போர்செய்கின்ற யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளின். இரு தம் தியானம் - பெரிய தம் தியானத்தை. இதயாரவிந்தம் திருந்து அந்தி ஆகன் - இதயாரவிந்தம் திருந்துதற்குக் காரணமான அந்திவானம்போன்ற திருமேனியையுடையவர். இதழி - கொன்றைமாலையை, எங்கள் செய்ய குலக் குருந்து - எங்கள் குலத்திற் றோன்றிய மங்கையானவள்; குருந்து - குருத்து. குலக்குருந்தென்பது குலக்கொழுந்தென்றது போல்வது. இருகைக் குருகையும் அம் தியாகமாகக் கொடுத்தாள்; குருகு - வளை; தியாகம் - கொடை.

இது பாங்கிகூற்று.

32. குருக்குங் கலாமதிக் கீற்றுவெங் கூற்றங் குடதிசையில்
இருக்குங் கலாப மயிலனை யீரென்னை யீன்றநற்றா
யருக்குங் கலாமனங் காணார்கண் ணீரு மணிந்தசந்தப்
பொருக்குங் கலார விழிபாகர் கூழைப் புராந்தகரே.

(கு-உரை.) குருக்கும் - நிறம்பெற்றுத் தோன்றுகின்ற. கலாமதிக்கீற்று - கலையையுடைய மதியின் கீற்று; கீற்று - பிறை. கீற்றாகிய கூற்றம். குடதிசையில் - மேற்றிசையில். கூற்றம் இருக்கும். மயில் அனையீர். என்னை ஈன்ற நற்றாயருக்கும் மனம் கல்லாம். சந்தப் பொருக்கும் - சந்தனப்பொருக்கையும். கல்லார விழி பாகர்; கல்லாரம் - கருங்குவளைமலர்.

கலாபமயிலனையீர், மதிக்கீற்றாகிய கூற்றம் குடதிசையில் இருக்கும். நற்றா பருக்கும் மனம் கல்லாம். புராந்தகர் கண்ணீரையும் சந்தனப்பொருக்கையும் காணார்; யான் யாதுசெய்வேன்?

இது தலைவிகூற்று.

33. தகரம் புனைகுழ லாயுடை மாது தழைத்தவள்
நகரம் புனைவன நாயக னேமுன் னமண்படரை
நிகரம் புனையும் பொருததன் றேபொன் னெருங்குழலைச்
சிகரம் புனையும் சிறுமருங் காண்மய றீர்ந்திடவே.

(கு-உரை.) தகரம் - மயிர்ச்சாந்தை. ... மாது தழைத்த வளநகரமாகிய புன்னைவன நாயகனே. நமன் படரை ... கர் அம்பு - மன்மதனுடைய பாணம்; படர் - ஏவலாளர். உன்னையும் பொருததன்றே; "கடுக்கண் டனையு மலைத்தது மாறன் கடுங்கணையே" (திருப்புகலூரந்தாதி, ருகூ.) பொன் - தேமல். சிகரத்தைப் புல்; புல் - தழுவுவாயாக. ஐயும் சிறுமருங்காள்.

புன்னைவன நாயகனே! மன்மதன் அம்பு உன்னையும் பொருததன்றே? இவள் மயல் தீர்ந்திடப் புல்லியருள்க.

இது பாங்கிகூற்று.

34. வேலா வலைய விடமமு தாக்கும் விமலநிரி
சூலா வலைய முலைம நங் காவுடைத் தோகையனு
கூலா வலைபம் பயில்வா ளனையகட் கோதையர்தம்
பாலா வலையகன் றெந்நா ளடைவனின் பாதத்தையே.

(கு-உரை.) வேலாவலையம் - கடலிற் றோன்றிய. விடம் அமுது ஆக்கும் - விடத்தை அமுதமாக்கிய; "ஆலந் தானுகந் தமுதுசெய் தானை" (தே); "ஆலத்தினலமு தாக்கிய கோன்" (திருச்சிற்றம்பலக்கோவையார், உஎ.) வல் முலை; ஐயம் மருங்கு; நிரனிறை; வல் - சூதாடுகருவி; ஐயம் - சந்தேகம்; மருங்கு - இடை. உலையையும் அம்பையும் வாளையும் ஒத்த கண்ணையுடைய; அயில் - கூர்மை. கண்வலை: "மழைத்தடங்கண் வலைவீசும் பெண்ணுசை" (பாசவதைப் பரணி, உகுஎ.) ஆவலை அகன்று - ஆசையை நீங்கி. நின் பாதத்தை எந்நாள் அடைவன்?

35. பாதார விந்த வாரணசை முக்கட் பரமவணங்
காதார விந்த ரணங்களுந் தூள்படக் காய்ந்தநகை
யாதார விந்தமு லாமுனல் காய்பொன் னணங்குமுலை
மீதார விந்த விரகா னலத்தின் வெதும்புவளே.

(கு-உரை.) பாதாரவிந்த - திருவடித்தாமரையையுடையாய். வணங்காதார் - பகைவர்களாகிய அசுரர்கள். அவிந்த, அரணங்களும் தூள்பட, நகையா - சிரிப்பையுடையவனே. தார இந்து - வெள்ளியைப் போன்ற சந்திரன். நல்காய் - அருள்செய்வாயாக. பொன் - தேமல். அணங்கு - தலைவியினது. ஆர - நிறைய. விரகானலத்தின் - பிரிவாகிய அக்கினியினாலே. அணங்கு வெதும்புவள்.

பாதாரவிந்த! பரம! நகையா! அணங்கு வெதும்புவள்; ஆதலால் நல்காய்.

இது பாங்கிகூற்று.

36. புவனச் சரா[illegible]ணுருங் கூழைப் புனிதனிரா
கவனச் சராசத[illegible]ன்றியன் றேர்கதி ராழியளித்
தவனச் சராசன வேள்போர் விலக்கிலன் றையல்சிவ
சிவனச் சராவு மிலையோ வெனுமிளந் தென்றலுக்கே.

(கு-உரை.) புவனச் சராசரம் - உலகிலுள்ள சரமும் அசரமும்; திரிபு நோக்கி வல்லொற்று மிக்கது. இராகவன் - திருமால். நச்ச - விரும்ப. ராகவன் ராசதமின்றி நச்ச; அன்று கதிரையுடைய ஓர் ஆழியை அளித்தவன். அ சராசனவேள் - அந்த வில்லையுடைய மன்மதனது. தையல் - தலைவி. சிவசிவ: இரக்கக்குறிப்பு; "சிலையோ கரும்புபொரு கணையோ வரும்புசிவ சிவ வாவி யொன்று முளதோ, இலையோ" (மதுரைக்கலம்பகம், அ௩.) நச்சு அராவும் - விஷத்தையுடைய பாம்பும். எனும் - என்று சொல்லுவாள். தென்றலுக்கு - தென்றற்காற்றையுண்பதற்கு.

புனிதன், அளித்தவன், வேளின்போரை விலக்கிலன். தையல், தென்றலையுண்பதற்கு அவர் அணிந்த பாம்பும் இல்லையோ என்பாள்.

இது பாங்கி கூற்று.

பி - ம். "இலையோ வருமிளந் தென்றலுக்கே."

37. தென்மலை யத்தமிழ் தேர்வா ராசையிற் செல்வருயர்
பொன்மலை யத்த மிசைதரித் தோர்புண்ட ரீகன்புட்பா
கன்மலை யத்த மிருதா மரையருள் காரணர்கா
மன்மலை யத்தமி யேற்கரு ளார்கொன்றை மாலையுமே.

(கு-உரை.) தென்மலையம் - பொதியில்மலை. பொன்மலை - மேருமலையாகிய வில்லை. அத்தம் மிசை - கையின்மேல். புண்டரீகன் - பிரமன். புட்பாகன் - திருமால். மலைய - சூடிக்கொள்ளும்படி. தம் இருதாமரை - தம்முடைய திருவடித்தாமரைகளிரண்டையும். காமன் - மன்மதன். மலைய - போர்செய்யாநிற்க.

செல்வர், தரித்தோர், காரணர், கொன்றைமாலையைத் தமியேற்கு அருளார்; அதனாற் காமன் மலைகின்றான்.

இது தலைவிகூற்று.

பி-ம். "செம்மலுயர்"

38. மாலை யிராவணப் பாகன் பணிவா ராசைநம்பர்
வேலை யிராவணற் செற்றேற் கிறைபவர் வெற்பில்வெய்ய
பாலை யிராவணப் பைங்கோதை சென்றனள் பார்க்கினங்கோர்
சோலை யிராவணற் கெவ்வா று பின்பு தொடர்ந்தனளே.

(கு-உரை.) மால் – பெருமையையுடைய. அயிராவணப்பாகன் – இந்திரன்; அயிராவணம்-ஐராவதம்; "உயரையி ராவண வாகனத் தோன்முத லும்பர்" (திருமயிலைத்திரிபந்தாதி, ௨0.) வேலை இராவணன் - கடல்சூழ்ந்த இலங்கையிலுள்ள இராவணனை; வேலை: ஆகுபெயர். செற்றேன்- இராமன். பாலை - பாலைநிலத்தில். இரா வண்ணப் பைங்கோதை - இராத்திரியின் நிறத்தையுடைய கூந்தலையுடையாள். இரா - இராது. அண்ணற்கு - தலைவனுக்கு.

நம்பர், இறையவர் இவரது வெற்பிற் பாலைநிலத்திற் கோதை சென்றனள்; அங்கே சோலை இராது; எவ்வாறு தொடர்ந்தனள்.

இது செவிலிகூற்று.

39. தொடரும் பலபிணி தீர்நெஞ் சேயொன் று சொல்துவன்கேள்
இடரும் பலபய மென்னுமுன் காத்தவ னேத்தும்விண்மேற்
படரும் பலவு புடைசூழுங் கூழை பரவுபிறை
அடரும் பலதுக் கியமனம் மேல்வா வஞ்சுவனே.

(கு-உரை.) இடர் உம்பல் - முதலையினால் துன்பத்தை அடைந்த கசேந்திரன். காத்தவன் - திருமால். படரும் - செல்லும். பலவு - பலாமரங்கள், எத்தும் கூழையென்க. பிறை அடரும் - பிறையை வென்ற, பல் அதுக்கி, யமன் நம்மேல் வர அஞ்சுவன்.

நெஞ்சே! கேள்; கூழையைப் பரவு; பரவினால் யமன் நம்மேல் வர அஞ்சுவன்.

40. அஞ்ச மனைய வுமையாள்பின் னேகி னசலமுந்நீர்
கஞ்ச மனையவள் பின்னேகி னேகு கலங்குவதென்
நெஞ்ச மனையயன் மால்பணி கூழை நிமலர்வெற்பில்
வெஞ்ச மனையடர் கண்ணுளு மவ்வண்ண மேவுவளே.

(கு-உரை.) அஞ்சம் - அன்னப்பறவையை. அசலம் - இமயமலை. அசலம் உமையாள்பின்னே ஏகின். முந்நீர் - பாற்கடல். கஞ்சம் மனையவள் - தாமரையை இருப்பிடமாக உடைய திருமகள். முந்நீர் திருமகளின்பின் ஏகின். ஏகு - நீயும் தலைமகளின்பின்னே செல்வாயாக. அனே - அன்னையே. அன்னையே! நெஞ்சம் கலங்குவது என்? சமனை அடர்க்கும் கண்ணையுடையவளும்.

சிவபெருமானை மணந்துசென்ற உமாதேவியின்பின் இமயமலையும், திருமாலை மணந்துசென்ற திருமகளின்பின் பாற்கடலும் சென்றிருக்குமாயின் நீயும் தலைவியைத்தேடிப் பின்செல்லுதலும் இரங்குதலும் பொருந்துமென்றபடி. மணந்த மகளிர் கணவன்பின் செல்லுதல் உலகஇயல்பு; ஆதலால் நீ வருந்தா தொழி என்பது கருத்து. "சங்க மலைக்குந் திருப்பாற் கடனுந்து தான்பயந்த, செங்க மலைக்குமுன் பிற்சென்ற தோமின்னுஞ் செம்மலும்போய்ப், பங்க மலைக்கு வழங்குபிரான்புக லூர்பயில்வார், துங்கம லைக்குமி தொக்கும்" புகலூரந்தாதி, ௩௬.

இது தலைவனுடன் சென்ற தலைவியை நினைந்து இரங்கிய செவிலிக்குயிக்கோர் ஏதுக்காட்டல்.

பி-ம். "முன்னீர்"

41. மேவிய கங்கை புனையும் பிரான்மலர் வேதியனூன்
பாவிய கங்கையி லேற்றிரக் தோன்மென் பணிலம்வராக்
கூவிய கங்கைய லாரஞ் சொரிதருங் கூழைசென்று
வாவிய கங்கை மடவார் கலவி மயக்கத்தையே.

(கு-உரை.) மலர்வேதியன் - பிரமனது. ஊன் பாவிய கம் - தசை நிறைந்த தலையில். பணிலம் - சங்கங்கள். வரா - வந்து. கூவிய - முழங்கினவாகி. கங்குஅயல் - வயல் வரம்பின் பக்கத்தில். ஆரம் - முத்தை. பணிலம் சொரிதரும். சென்று அவாவி, அகம் - மனமே. மயக்கத்தைக் கை; கை - வெறுப்பாயாக.

அகமே! பிரான், இரந்தோனது கூழைசென்று அவாவி, மயக்கத்தைக் கை என இயையக்க.

42. மயங்கத் தாரதல மங்கையர் கைப்பலி வாங்குமணிப்
புயங்கத் தாரதவன் பல்லுகுத் தோர்வரைப் பூவைமுலை
முயங்கத் தாரதா வுண்டுதென் கூழையின் முத்தமிழ்கொண்
டியங்கத் தாரதவர் பானெஞ்ச மேயென்கொ லேற்பதுவே.

(கு-உரை.) தாரதல மங்கையர் மயங்க, மணிப் புயங்கத்தர் - மணிகளை யுடைய பாம்பை அணிந்தவர்; புயங்கம் - பாம்பு. ஆதவன் பல் - சூரியன் பல்லை. வரைப்பூவை - உமாதேவியாரது. முயங்கு அத்தரது ஆதரவு தென்கூழையில் உண்டு. முத்தமிழ்கொண்டு - முத்தமிழ்ச்செய்யுட்களை இயற்றிக்கொண்டு. இயங்க - இயங்குதற்கு. ஏற்பது - இரப்பது.

நெஞ்சமே! கூழையில், புயங்கத்தர், உகுத்தோர், அத்தரது ஆதரவுண்டு; தாரதவர்பால் முத்தமிழ்கொண்டு ஏற்பது என்கொல்?

43. ஏற்றின னாக வனத்தன்முன் போயிவ் விளம்பிறைவெண்
கீற்றின னாக வனத்தந் தருமென் கிறுபையொடு
சாற்றின னாக வனத்ததத் தாய்சம்ப ராரிவந்து
தோற்றின னாக வனத்தவ ளாருயிர் சோருமென்றே.

(கு-உரை.) நாகவனத்தன் - புன்னைவனத்தான். பிறையாகிய வெண் கீற்றனது. இனனாக அனத்தம் தரும் - சூரியனாகத்தோன்றித் துன்பத்தைத் தரும்; அனத்தம் - அனர்த்தம். என் - என்பாயாக. இன்னல் சாற்று - துன் பத்தைச்சொல். நாகவனத்த தத்தாய் - நாகப்பச்சையின் நிறத்தையுடைய கிளியே; வன்னம் - வர்ணம். சம்பராரி - மன்மதன். ஆ: ஐயோ. கவனத்தவள் - மிக்க கவலையையுடையவளது.

தத்தாய்! நாகவனத்தன்முன்போய்ப் பிறைக்கீற்று இனனாக அனத்தம் தருமென்பாயாக. பின்னும் சம்பராரி வந்து தோற்றினன்; அதனால் கவனத்த வள் உயிர்சோருவாளென்று இன்னலை அருளொடு சாற்றுவாயாக.

இது கிளிவிடுதூது.

44. சோர்வரு மந்த ரதியனை யாள்கொண்டு தோகையன்னீர்
தேர்வரு மந்த ரவிவரல் பார்க்குந்தென் கூழையிற்புள்
ஊர்வரு மந்தா நாதனும் போற்ற வுருகியருள்
கூர்வரு மந்தரத் திண்புய மாலை கொடுத்திலரே.

(கு—உரை.) அருமந்த ரதியனையாள் சோர்வுகொண்டு, ரவிவருதலைப் பார்ப்பாள்; ரவி - சூரியன். புள் ஊர்வரும் - கருடப்பறவையையும் அன்னப் பறவையையும் ஊர்பவர்களாகிய திருமாலும் பிரமதேவனும். அருள்கூர்வரும் - அருள்கூர்பவராகிய சங்கரர்; உம்மை: அசைநிலை; உயர்வுசிறப்புமாம். மந்தர மலைபோன்ற திண்ணிய புயத்தில் அணிந்துள்ள மாலையை.

சூரியன்வருதலைப் பார்த்தல் இரவுநீடுபெருவரல் நீங்க; இரவுநீடுபெருவரலென் பது புறத்திணையிலுள்ள பெண்பாற்கைக்கிளையில் ஒருதுறை.

தோகையன்னீர்! ரதி அனையாள் சோர்வுகொண்டு ரவிவரலைப் பார்க்கும். கூழைநாதர் மாலைகொடுத்திலர்.

இது பாங்கிகூற்று.

45. கொடுங்கலி யானைநெஞ் சேபெறி வான்பவக் குன்றினைவே
ரொடுங்கலி யானை யுதைத்தோனென் கூழை யுகந்தபிரான்
கடுங்கலி யானை கரும்புணக் கண்டவன் காசினிசூழ்
நெடுங்கலி யானைய னத்திபங் காளனென் னித்தமுமே.

(கு—உரை.) கலித்துன்பத்தால் நைகின்ற நெஞ்சே; கலி - வறுமை. பவ மாகிய குன்றினை வேரொடும் கல்லி எறிவான்; பவம் - பிறவி. ஆனை - இட பத்தை. மதுரையிற் கல்லாலாகிய யானை கரும்பை உண்ணச் செய்தவன். நெடுங்கலி ஆம் நயனத்தி - உமாதேவியார்; கலி - கடல். என் - என்பாயாக.

நெஞ்சே! நித்தமும் எறிவான், உதைத்தோன், பிரான், கண்டவன், பங்காளன் என்று சொல்வாயாக.

46. நித்தம் பயிலர தென்கூழை வாழு நிமலமத
மத்தம் பயில காவணிந் தோய்மத வேள்விடுத்த
கொத்தம் பயில வருமா வியைமைக் குவளைவிழி
தத்தம் பயில விதழியெவ் வாறு தரித்திடுமே.

(கு-உரை.) நித்தம்=நிருத்தம்-நடனம்; "நிருத்தம் பயின்றவன்" (திருச்சிற். சுஉ.) மதமத்தம் - ஊமத்தைப்பூவையும்; "கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம், உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானுர்" (தே.) பய் இலகு அரவு; பய்=பை - படம்; "பயிலத்தி மேவித் துயில்கூ ரரங்கர்" (திருவரங்கத்தந்தாதி, சகூ.) கொத்து அம்பு: எழுவாய். அம்பு ஆவியை அயில வரும். விழி தத்து அம்பை - கண்ணீரை. இலவு இதழி - இலவம்பூவைப் போன்ற இதழையுடைய தலைவி.

அணிந்தோய்! வேள்விடுத்த அம்பு ஆவியை அயில வரும்; விழி தத்து அம்பை இதழி எவ்வாறு தரிப்பாள்?

இது பாங்கிகூற்று.

47. இடுவந்தி யாயுரைக் கும்பனி நீரொன் றிறைப்பர்வெந்நீர்
கொடுவந்தி யாழ்மொழி நல்லார் பொருங்கொடி யோனையின்னும்
அடுவந்தி யாநின்ற பேர்க்கருள் கூழை யமலவசைக்
கடுவந்தி யார்பொறுப் பார்வெறுப் பாமிடுங் கைவந்தியே.

(கு-உரை.) யாய் இடுவந்தி உரைக்கும்; இடுவந்தி - குற்றமில்லாதவர்மேற் குற்றத்தை ஏற்றிச்சொல்லும் சொல்; 'பொற்கொல்லனது நெஞ்சம் இடுவந்தி கூறுதலைப் புரிந்துநோக்க' (சிலப். கசு: கக௭-உ0, அடியார்.) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க. கொடுவந்து - கொண்டுவந்து. நல்லார் - தோழிமார். நல்லார் வெந்நீரைக் கொடுவந்து பனிநீரொன்று இறைப்பர். கொடியோனை - மன்மதனை. அடு - அடுவாயாக. வந்தியாநின்றபேர்க்கு - வணங்குபவர்க்கு. வசைக்கடு - பழிமொழியாகிய விஷத்தை. வந்து: உரைநடை; பரிமேலழகருரையிலும், துறைமங்கலம் சிவப்பிரகாசஸ்வாமிகள்வாக்கிலும் வழக்கிலும் இச்சொல் மிகவும் காணப்படும். கைவந்தி - தோளில் அணியப்படும் ஆபரணம்; "வணங்கிறைப் பணைத்தோள்..............வயக்குறு வந்திகை" (மதுரைக். சகச-டு) என்பதனையும் அதன் உரையையும் அடிக்குறிப்பையும் பார்க்க.

இது தலைவிகூற்று.

48. வந்திக் கமலங் கவிர்சடை மேல்வைவயை மண்சுமந்தோர்
நந்திக் கமல மணிசொரி கூழையி னம்பர்மதத்
தந்திக் கமலங் கலையொழித் தோன்பணி சங்கரனென்
றுந்திக் கமல முதித்தோன் விதிப்ப தொழிநெஞ்சமே.

(கு-உரை.) வந்திக்கு - செம்மனச்செல்வியென்னும் பிட்டுவாணிச்சிக்கு. அம் அலங்கு - ஆகாயகங்கைநீர் விளங்குகின்ற. நந்து இக்கு - சங்கமும் கரும்பும். அமலம் - குற்றமின்மை. மணி - முத்துக்களை. மதத்தந்தி - கசேந்திரன். கம் மலங்கலை - நீரில் மயங்குதலை. ஒழித்தோன் - திருமால். என்று - என்று துதித்து. உந்திக்கமலம் உதித்தோன் - பிரமன். விதிப்பது - இனிப் பிறப்பிப்பதை.

நெஞ்சமே! சுமந்தோர், நம்பர், சங்கரரென்றுசொல்லிப் பிறத்தலை ஒழிப்பாயாக.

பி-ம். "உதிப்போன் விதித்தது"

49. ஒழியா யிரங்கலை யோவிய மேயென் றுரைத்து தவீர்
விழியா யிரம்படைத் தோன்பணி கூழை விமலர்பைந்தார்
பழியா யிரண்டு மருப்போ தொருத்தனைப் பார்ப்பதென்மால்
வழியா யிரந்தக னீரன்றி வேறில்லை மங்கையரே.

(கு-உரை.) இரங்கலை ஒழியாய். ஓவியமே - சித்திரம்போல்வாய். பைந் தாரை உதவீர். பழியாய் - குடிக்குப் பழி உண்டாகும்படி; ஆய் - ஆக. இரண்டு மருப்பு ஓது ஒரு தனை - இரண்டு மருப்புக்களையுடைய சொல்லப்படுகின்ற ஆட்டினை; ஒரு - ஆடு; "ஒருத்திக் கொருவன் பகையோ" (தனிப்பாடல்.) பார்ப்பது என் - வெட்டப் பார்ப்பதற்குக் காரணம் யாது. மால்வழி ஆயிர் - மயக்கம் தோன்றிய வழியை ஆராயாமலிருக்கின்றனிர். நீர் அந்தகன் அன்றி - இந்த ஆட்டுக்கு நீர் அந்தகனாக வுள்ளீரே யல்லாமல்; அந்தகன் - யமன். மங்கையரே யென்றது செவிலித்தாய் முதலிய ஐவரையும் நோக்கி.

மங்கையரே! தாரை உதவீர்; ஒருத்தனைப் பார்ப்பது என்? ஆயிர்; நீர் அந்தகன் அன்றி வேறில்லை.

இது பாங்கி வெறிவிலக்கியது.

50. மங்கைக்கு வாம மளித்தருள் கூழை வரதவிளங்
கொங்கைக்கு வாமதி யொன்றோ பகையொரு கோடிகெட்டேன்
சங்கைக் குவாமங்கை பெற்று ளவள்பெற்ற தானையிவள்
அங்கைக்கு வாம மணற்சிறு கூட லளித்ததுவே.

(கு-உரை.) மங்கைக்கு-உமாதேவியாருக்கு. வாமம்-இடப்பாகத்தை. இளங் கொங்கைக்கு - தலைவிக்கு. உவாமதி ஒன்றோ பகை - கலை நிரம்பிய சந்திரன் ஒன்றுமட்டுமோ பகை? கெட்டேன் - ஐயோ. சங்கை - இவள் வளையல்களை. கு ஆம் மங்கை - பூமியாகிய மடந்தையானவள். வளையல்கள் நழுவிப் பூமியில் விழுந்துவிட்டன என்றபடி. அவள்பெற்ற தானை யென்றது கடலினை; தானை - ஆடை. இவள் அங்கைக்கு - தலைவியினது கைகளுக்கு. வாமம் - அழகு. மணற்சிறுகூடல் - மணலில் எழுதப்படும் சிறிய கூடற்சுழியினை. பூமியாகிய பெண்ணுக்கு இவள் வளையல்களை அளித்தாள்; அவள் ஆடையாகிய கடல் இவள் கூடற்சுழி எழுதுவதற்கு மணலை அளித்தது; இது பரிவருத்தனையணி.

வரத! தலைவிக்கு மதி ஒன்றுதானு பகை? வேறு கோடி பகைகள் உள்ளன. உம்முடைய விரகத்தால் இவள் கைவளையை இழந்தாள். கடற்கரையிலிருந்து மணலிற் கூடற்சுழியைச் சுழிக்கின்றாள்; இரங்கியருளவேண்டும்.

இது பாங்கிகூற்று,

பி-ம். "அளித்தவர் கூழை" "ஒரு கோடியன்றோ"

51. அளித்தடங் காவி யலர்விழி யாவுடை யம்மைபங்கர்
களித்தடங் காவியல் சார்கூழைச் சங்கரர் நாட்டெழுகார்
குளித்தடங் காவிய முன்கா ணதைக்கடுந் தேர்விடுத்தே
தளித்தடங் காவி யருள்வல வாவொரு தையலுக்கே.

(கு-உரை.) அளியையும் காவியலரையும்போன்ற விழியையுடைய. களித் தடம் கா - குளிர்ச்சியையுடைய தடமும் காவும். நாட்டு - நாட்டில். கார் - மேக மானது. களித்து அடங்கா இயமன் காண். அதை - அம்மேகத்தை. தள்ளித் தடு; தள்ளி : தொகுத்தல்விகாரம். வலவா - தேர்ப்பாகனே. தையலுக்கு அங்கு ஆவி அருள்.

வலவா! நாட்டில், கார் இயமன்காண்; அதைத் தடு; தையலுக்கு ஆவியை அருள். நீ விரைந்துசெல் என்பது கருத்து.

இது மீண்டுவரும் தலைவன் பாகனுக்குக் கூறல்.

பி-ம். "காவியல் சூழ்கூழை"

52. தைய லருந்தளிர் மேற்சரு காமிவ டன்னுயிரை
மைய லருந்த லறுவதெந் நாண்மதி போலொளிரச்
செய்ய லருந்தண் கமலமுத் தீனுந்தென் கூழைப்பிரான்
கைய லருந்த வருமுனம் வேடனைக் காய்ந்தவனே.

(கு-உரை.) தையல் அருந்தளிர்மேல் சருகு ஆம் - தலைவி தளிர்ப்பாய லின்மீது காமவெப்பத்தால் சருகுபோல்கின்றாள். இவள் உயிரை. மையல் - மயக்கம். ஒளிர - ஒளிரும்படி. செய்யில் அலரும் கமலமானது முத்தை ஈனுகின்ற. ஒளிர முத்தீனும். பிரான் : விளி. கையிலுள்ள அலர்களை உந்துதற்கு வேள்வரு முன்னமே; வேள் - மன்மதன்; வேள்தன்னை.

கூழைப்பிரானே! காய்ந்தவனே! இவளுயிரை மையல் அருந்துதல் நீங்குவது எக்காலம்? அருளவேண்டுமென்றபடி.

இது பாங்கிகூற்று.

பி-ம். "மைய லருந்த வருவதென்னும்"

53. காயந் தகன முறுமுன மாவிகைக் கொள்ளநம்மை
ஆயந் தகனமர் செய்யாமுன் கூழை யரனைமதம்
போயந் தகனவ னென்னவெய் யோன்கண் பொதுத்தவனை
நேயந் தகனளி னத்தாள் பணிய நினைநெஞ்சமே.

(கு-உரை.) காயம் - உடம்பு. தகனம் உறுமுனம். ஆய் - ஆய்கின்ற. அந்தகன் அமர் செய்யாமுன்; அந்தகன் - யமன். மதம்போய் - செருக்குக் கெட்டு. அந்தகன் என்ன - குருடனென்றுசொல்லும்படி. வெய்யோன் கண் - சூரியனுடைய கண்ணை. பொதுத்தவனை - துளைத்தவனை. நேயம் தக - அன்பு பொருந்த.

நெஞ்சமே! காயம் தகனம் உறு முன்னம், அந்தகன் அமர்செய்யாமுன்னம் அரனது தாளைப் பணிய நினை.

பி-ம். "அமர் செல்லாமுன்"

54. நினைவா ரிதய நிறைந்திருப் பார்புன்னை நீழலுற்றோர்
கனைவாரி தன்னில் விடம்வாரி யுண்டருள் கண்டர்வெற்பில்
எனைவா ரிதழுற வேயுரைப் பார்பச் சிளங்கிளிகாள்
தினைவா ரிதணிற் சிலநா ளிருந்த திருந்திழைக்கே.

(கு-உரை.) நினைவார் - நினைக்கின்ற அடியார்களுடைய. கனை வாரி - முழங்குகின்ற கடல். என் நைவு - என்னுடைய தளர்ச்சியை. இதம் உற ஆர் உரைப்பார். நினை வார் இதணில் - நினைப்புனத்தே இருந்த நீண்ட பரணின் மீது.

கிளிகாள்! என் நைவைத் திருந்திழைக்கு ஆர் உரைப்பார்.

இது தலைவன் வறுங்களநாடி மறுகல்.

55. இழையா வையுமிழந் தாளெண்செய் வாளிரங் காள்கருணை
மழையாவை யுற்பல மைவிழி பால்வா ராசையெந்தாய்
தழையாவை யுன்னத வெற்பான் மழையைத் தடுத்தளித்தோன்
குழையாவை யுற்ற கதிராழி வேண்டக் கொடுத்தவனே.

(கு-உரை.) இழை யாவையும் - ஆபரணங்களையெல்லாம். இரங்கு ஆள் - இரங்குவாயாக, ஆள்வாயாக. உற்பலம் - கருங்குவளை. மைவிழி - தலைவி; மைவிழிபாற் கருணைவை. தழை ஆவை - தழைத்த பசுக்களை. உன்னத வெற்பால் - உயர்ச்சியுள்ள கோவர்த்தனகிரியால். ஆவை அளித்தோன் - திருமால். குழையா வேண்ட - குழைந்து பிரார்த்திக்க. ஆழி - சக்கரத்தை. வேண்ட ஆழிகொடுத்தவனே.

எந்தாய்! கொடுத்தவனே! மைவிழிபால் இரங்கு, ஆள், கருணையை வை.

இது பாங்கிகூற்று.

56. தவமணி மாலொழி யேற்கருள் பாந்தட் சடிலகவுத்
துவமணி மார்ப புவனமும் வானுஞ் சுடரெனநிற்
பவமணி மாக மளந்தோய்செம் மேனிய பச்சைவண்ணா
நவமணி மாளிகை சூழ்கூழைச் சங்கர நாரணனே.

(கு-உரை.) தவம் மண்ணி - தவத்தைச்செய்து; மண்ணி - பண்ணி; "ஆவுதிமண்ணி" (மதுரைக். சகூ௯) என்பதன் உரையைப் பார்க்க. பாந்தள் - பாம்பையணிந்த. கவுத்துவமணியை அணிந்த மார்ப. புவனமும் வானும் சோதி வடிவங்கொண்டு நிற்பவனே; "சோதியே சுடரே" (திருவாசகம்.); புவனம் - பூமி. மண்ணையும் இந்த மாகத்தையும் அளந்தவனே; மாகம் - ஆகாயம்.

இதில் சங்கரர் நாராயணர் ஆகிய இருவருடைய செயல்கள் முறையே கூறப்பட்டுள்ளன.

சங்கரநாரணனே! அருள்.

57. நார மறுகு வளைமதி சூடிய நாகவனத்
தோர மறுகு வளைகவர்ந் தாரினிச் சொல்வதென்மால்
பார மறுகு வளையோ விவள்படு பாவிமதன்
ஈர மறுகு வளைதனக் காரிங் கெதிர்நிற்பரே.

(கு-உரை.) நாரத்தையும் அறுகையும் மதியையும் சூடிய; நாரம் - நீர்; கங்கை. நாகவனத்தோர். அம் மறுகு - அழகிய வீதியில். சொல்வது என்- சொல்வது யாது. மால் பாரம் - மயக்கம் பாரமாக உள்ளது; "உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" (குறுந். கஅ.) இவள் ஐயோ மறுகுவள். படுபாவியாகிய மன்மதனது. ஈரம் அறு குவளைதனக்கு ஆர் இங்கு எதிர்நிற்பர். குவளை கொலைப்பாணமென்பது இங்கே அறியற்பாலது.

இது பாங்கிகூற்று.

பி-ம். "பார மறுகு வளைபோ யிவள்படு"

58. எதிராடி யங்க மிலானென்செய் வான்மை யெழுதுகண்முத்
துதிராடி யங்க மதியழ லாதொளிர் பூணணிந்து
கதிராடி யங்கனை பார்க்குநின் மாலைகண் டாற்சுடலை
அதிராடி யங்கண தென்கூழைச் சங்கர வற்புதனே.

(கு-உரை.) எதிர் - எதிரே. ஆடி - போர்செய்து. அங்கமிலான் - மன்மதன். அங்கமிலான் எதிராடி என்செய்வான். கண் முத்துதிரான் - கண்ணீரை வீழ்த்தாள். தியங்கும்படி மதியானது வெம்மையைத் தாராது. பூணை அணிந்து. ஆடியை அங்கனை பார்ப்பாள்; ஆடி - கண்ணாடி; அங்கனை - பெண்; என்றது தலைவியை. அதிர ஆடியவனே; "அதிரவீசியாடுவாய்" (திருஞான. தே.); அதிர: தொகுத்தல்விகாரம்.

ஆடியவனே! அங்கணனே! சங்கர! அற்புதனே! நின் மாலையைத் தலைவி காண்பாளாயின், அங்கமிலான் என்செய்வான்? இவள் கண்முத்துதிராள்; மதி அழலாது; இவள் ஆடியைப் பார்ப்பாள்.

இது பாங்கிகூற்று.

59. அற்புத வந்தரி யேத்திய கூழை யமலவிம
வெற்புத வந்தரி போடுமென் னெஞ்சகம் வீற்றிருக்கப்
புற்புத வந்தரி பூண்முலை யார்க்கன்பு பூண்டமயற்
கற்புத வந்தரி யார்புரம் போலென்று காண்பதுவே.

(கு-உரை.) அற்புத. வந்து அரி எத்திய; அரி - திருமால். இமவெற்பு - இமயமலை. உதவு - பெற்ற. அந்தரியோடும் - உமாதேவியாரோடும். தேவரீர் வீற்றிருக்க. புற்புதம் - குமிழியைப் போன்ற. அம் தரி - அழகைத் தரித்த. புற்புதம் கொங்கைக்கு உவமை. மயல் கற்புதவம் - மயக்கமாகிய கற்புதவம்; கற்புதவம் - கல்லாலாகிய கதவு. தரியார் - பகைவரது.

அற்புத! அமல! அந்தரியோடும் என் நெஞ்சகம் வீற்றிருக்க, மயற்கற்புதவம் புரம்போல் இல்லையாதலை என்று காண்பது? தேவரீர் என் நெஞ்சில் வீற்றிருந்தால் என்மயல் நீங்கிவிடுமென்பது கருத்து.

60. காணா திருவ ரடிமுடி தேடுங் கனகசபை
வாணா திருவா ராசையெந் தாய்செம் மணிப்புயங்கப்
பூணா திருவா மாதனை யாண்மயல் பூண்டுநிறை
பேணா திருவா வேல்விழி யார்வசை பெற்றனளே.

(கு-உரை.) கனகசபை வாணா. செம்மணிகளையுடைய புயங்கமாகிய ஆபரணத்தையுடையாய்; புயங்கம் - பாம்பு. திருவாகிய வர மாதை அனையாள்; தலைவி; வரம் - விசேடம். நிறை - மறைபிறரறியாமை; "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" (கலி. கஙௗ:கஉ.) அரத்தையும் வேலையும்போன்ற இருவிழிகளையுடைய பெண்டிர் கூறுகின்ற. வசை-பழிமொழியை.

கனகசபைவாணா! எந்தாய்! பூணா! திருமாதனையாளாகிய இவள் நிறையைப் பேணாமல வசையைப பெற்றனள்; அருள்வாயாக.

இது பாங்கிகூற்று.

61. பெற்றத் திலக வுலாவரு வாரென் பிறைமதிபின்
பற்றத் திலக நுதல்பாகர் கூழைப் பாமர்நிலா
முற்றத் திலக மகிழ்வோடு மென்னை முயங்கியல
கற்றத் திலக மளவுமெண் ணாரென்ன கற்பனையே.

(கு-உரை.) பெற்றத்து - இடபத்தில். என் மதி பின்பற்ற உலாவருவார். நிலாமுற்றத்தில் அகமகிழ்வோடும். அல் அகற்ற - இருளைப்போக்குவதற்கு. திலகம் அளவும் - குன்றிமணியளவும்; திலகம் - ஒருவகைக் குன்றிமணி. என்ன கற்பனை - என்னவிதி; கற்பனை - ஏற்பாடுமாம்; "கற்பனையத்தனை யென்பிறவிக்கு" புகலூரந்தாதி, ௬உ.

இது தலைவிகூற்று.

62. கற்பகக் காநிழ லுற்றோன் பணிசங் கரநமனு
டற்பகக் கானிமிர் தென்கூழை வாண திவாகரனிற்
பொற்பகக் காநிற்கும வெண்ணில வாலம் பொதியவுயர்
வெற்பகக் காநில விற்கொடி தாமிந்த மெல்லியற்கே.

(கு-உரை.) நமனுடைய உடல் பகும்படி; பக - பிளவுபடும்படி. திவா கரனில - சூரியனைப்போல. பொற்ப - பொலிவுடையவரே. (சந்திரன) கக்கா நிற்கும் வெண்ணிலவு ஆலம்; சந்திரன்: தோன்று எழுவாய். பொதிய உயர் வெற்புஅகக் கால் - தென்றற்காற்று. நிலவின் - நிலவைக்காட்டிலும்.

இது பாங்கிகூற்று.

63. இயலரு காவணஞ் சங்கத்தி லேறு மிறைவர்நறை
பெயலரு காவணங் கன்பர்க்குள் ளாரிந்தப் பெற்றிசெய்யார்க்
கயலரு காவண மேனியர் கூழை யணிநகர்சூழ்
வயலரு காவணங் காண்கடந் தேம்வெய்ய வன்சுரமே.

(கு-உரை.) இயல் - இயற்றமிழ். அருகாவணம் - குறையாதவாறு. நறை பெய் அலர் உகா வணங்கு அன்பர்க்கு; உகா - உகுத்து. செய்யார்க்கு அயலர். உகாவண்ணம் - கெடாத அழகையுடைய. வயல் அருகு ஆவணம் காண் - வயலருகே உள்ள கடைவீதியாகும் இது. வன்சுரத்தைக் கடந்தேம்.

இது தன்பதியடைந்தமை தலைவன் தலைவிக்குச் சாற்றல்.

64. வன்னி காந்தை யறுகா ரரவ மதிமுடித்த
சென்னி காந்தையம் பெய்வோனைக் காய்ந்தவன் சிற்றிடைதான்
மின்னி காந்தைய லோர்பாகன் கூழை விமலன்வெற்பா
கன்னி கரந்தை வரவெல்ல லாஞ்சிலைக் காமனையே.

(கு-உரை.) வன்னி - வன்னிபத்திரம். ஆர் அரவம் மதி - ஆத்தியையும் பாம்பையும் சந்திரனையும். சென்னி - திருமுடியையுடையார். கரந்து ஐ அம்பு எய்வோனை - மன்மதனை. சிறு இடை; மின் நிகர் அம் தையல் - உமாதேவியார்; சிற்றிடைக்கு மின்னல் உவமை. தான்: அசைநிலை. கன்னியின் கரம் தைவரச் சிலைக்காமனை வெல்லலாம்; கன்னியின் காம் தைவர - தலைவியின் கையைப் பற்றினல்; பாணிக்கிரகணம்செய்யென்பது கருத்து.

இது பாங்கி உலகியலுரைத்தல்.

65. காமனம் பாலிட்ர் கொண்டுமின் ஞர்முலை கண்டுமையங்
காமனம் பாலிலைக் கண்டுயில் வோன்கம லாசனனைங்
காமனம் பாலிளங் கன்னிவைத் தோயென்று கைதொழுதற்
காமனம் பாலி யெனுங்கூழை வாழ்கறைக் கண்டனையே.

(து-உரை.) காமன் அம்பால். மயங்காமல் நம்பு. ஆல் இலைக்கண் துயில்வோன - திருமால். ஐந்து கா மன் - இந்திரன. அழகிய பக்கத்தில இளங்கன்னியை வைத்தோய். என்று தொழுதற்கு ஆம் மனத்தைப் பாலி. எனும் - என்று திருமால் முதலியவர்கள் பிரார்த்திக்கும்.

நெஞ்சே! கறைக்கண்டனை நம்பு.

66. கண்டலம் போதிரண் டானவர் கூழையிற் கண்ணுதலார்
கண்டலம் போதிகழ்ந் தோர்சங்க ரேசர் கனவரைமேற்
கண்டலம் போதிசொல் மென்கோதை மைவிழிக்கன்னியிடை
கண்டலம் போதி யளிகா ளிருக்கக் கருதுகவே.

(து-உரை.) கண்தலம் போது இரண்டு ஆனவர்; போது - சந்திரசூரியர். போது : ஆகுபெயர். கண்டல் அம்போது - தாழம்பூவை. கண்டு சொல், அல் கோதை, அம்போதி விழி; கிரனிறை; கண்டு - கற்கண்டு, அல் - இருள், அம் போதி - கடல், கோதை - கூந்தல். கன்னியின் இடையைக் கண்டு. ஓதியிலுள்ள வண்டுகளே! இருக்க - கூந்தலில் இருக்க. இடையின் மென்மையைக் காணின் நீர் கூந்தலில் இருக்கமாட்டீர் என்றபடி.

இது தலைவன் வண்டோச்சி மருங்கணைதல்.

67. கருமங் கவலை நெறியால்வர் தெம்மைக் கலக்கவெழு
கருமங் கவலைநெஞ் சேவர ராசைக் கதிரவனி
கருமங் கவலை நதிசூடி யென்றுகை கூப்புவதே
கருமங் கவலை யினிவேறு வைக்கக் கடவதன்றே.

(து-உரை.) கருமம் - வினைகள். கவலைநெறியால் - கவர்த்த பலவழிகளால். கலக்க - கலந்துகொள்ளுதலால். எழு கரு மங்க - எழுகின்ற பிறவியானது மங்கும்படி. வல்லை - விரைவாக. வரராசையிலுள்ள. கதிரவன் நிகரும் அங்க! அலைநதியைச் சூடியவரே! என்று வல்லை கைகூப்புவதே கருமம். இனி வேறு கவலை வைக்க. கடவது அன்று - உனக்கு உரித்தன்று.

68. கடந்தந் தனமென் முலைமருங் காள்பங்கர் காவில்வண்டு
கடந்தந் தனமென் றிசைபாடுங் கூழைக் கறைமிடற்றார்
கடந்தந் தனவெற்பை மீறும் புயத்தர் கடுக்கைநல்கார்
கடந்தந் தனங்க மெனவரும் பாவிக் கருங்கங்குலே.

(கு-உரை.) கடம் - குடம்; தந்து - நூல். மருங்கு - இடை. கடம்அன்ன முலை; தந்து அன்ன மருங்கு; நிரனிறை. மருங்காள் - உமாதேவியார். காவில் - சோலையில். வண்டுகள் தந்தந்தனம என்று இசைபாடும்; தந்தந்தனம் : தாளக்கட்டு. கறை - விடம். அம் தன வெற்பை - மேருவை; தனம் - பொன். வெற்பைக்கடந்து மீறும் புயத்தர். கடுக்கை - கொன்றைமாலையை. கடு - விடம். அந்து - ஒருவகைப் பூச்சி. அந்தன - யமன. பாவிக் கருங்கங்குல கடுமுதலியவற்றின அங்கம்போல வருமென இயைக்க.

கறைமிடற்றார் நல்கார்; கங்குல் வரும்.

இது தலைவிகூற்று.

69. கங்குலை மாலை யனையமென் கோதை கலாமதியம்
கங்குலை மாலை யனலதன் மேன்மெழு கானதென்னங்
கங்குலை மாலைய னோர்கூழை நம்பரெக் காலமபக்
கங்குலை மாலை யருள்வரென் றேயழுங் கண்பிசைந்தே.

(கு-உரை.) கங்குலை - இருளை. மாலை - மேகத்தை. மென்கோதையை யுடைய தலைவி. மதியம் கலையையுடைய உலை ஆகும்; கங்கு - பக்கம். மாலை அனல்; "அழல்போலுமாலைக்கு" (குறள், ௧௨௨௮.) அதன்மேலுள்ள மெழுகாயிற்று என் அங்கம். குல்லை மால் அயன - திருத்துழாயையணிந்த திருமாலும் பிரமனும்; குல்லை: தொகுத்தல்விகாரம். ஓர் - உணருகின்ற. மயக்கத்தைக் குலைக்கின்ற மலர்மாலையை நம்பர் எக்காலம் அருள்வர். கண் பிசைந்து அழுவாள்; "கண்பிசைந் தொருசே யின்னுங் கலுழினும்" பிரபு. கைலாசகதி. ௫.

இது பாங்கிகூற்று.

70. கண்ணிக் கரும்புயர் மால்வரை தோள்சொன்ன கைகொங்கைவேற்
கண்ணிக் கரும்புய மார்மெலி யார்கம ழுந்துளவக்
கண்ணிக் கரும்புய லோர்பாகர் கூழைக் கமலவயற்
கண்ணிக் கரும்புய னோக்காது சேல்வெங் கார்முகிலே.

(கு-உரை.) கண் - கணுக்களையுடைய மூங்கில்; ஆகுபெயர்; வரையென் பது போல. இக்கு - கரும்பு. வரை - மலை; கண் - தோள்; இக்கு - சொல்; முல்லையரும்பு நகை; மால்வரை கொங்கை; நிரனிறை. வேற்கண்ணிக்கு - வேல்போன்ற கண்ணையுடைய தலைவிக்கு. ஆர் புயம் மெலியார். துள வக்கண்ணியையுடைய கரும்புயல் - திருமால். கரும்புயலோர் பாகர் - சங்கர நாராயணர். கண்ணி - சிறுவாய்க்கால்; "தெறுகு தலைக்கணி வாய்க்கால் பெரு குந் திருமயிலை" (திருமயிலைத்திரிபந்தாதி, அஎ.) கண்ணியையுடைய வயலிற் றோன்றிய கரும்பு - தலைவி. உய்ய - பிழைக்கும்படி. உய்ய என்பது நோக் காது என்னும் எதிர்மறைவினையெச்சத்தின் முதனிலையோடு முடிந்தது.

கார்முகிலே! சேரல்.

தலைவன் மேகத்தொடு கூறல்.

பி-ம். 'கார்முகமே'

71. காரங் கடுக்க மயிலாடுங் கூழைக் கடவுளந்த
காரங் கடுக்க வளர்கோதை பாகனென் காமவெவ்வி
காரங் கடுக்க மொழிநெஞ்ச மேவெங் கணைபடுபுண்
காரங் கடுக்க யமவாதை யுற்றிடுங் காலத்திலே.

(கு-உரை.) கார் அங்கு அடுக்க; அடுக்க - அடுத்தலால். அந்தகாரம் கடுக்க - இருளைக் கோபித்தற்கு. என் - என்பாயாக. காம வெவ்விகாரங்கள் துக்கம் ஒழி நெஞ்சமே! கணைபடுபுண்ணில் செருகும் காரச்சீலையை. கடுக்க - ஒப்ப. யமவாதையுற்றிடுங்காலத்தில்.

நெஞ்சமே! யமவாதையுற்றிடுங்காலத்தில் கூழைக்கடவுள் பாகனென்பாய்; காமவிகாரங்களையும் துக்கத்தையும் ஒழி.

72. காலங் கனலர் தாநில மானவர் கண்ணின்மணி
காலங் கனலங் கழனியி ராசைக்கங் காளர்கங்குற்
காலங் கனலம் புலிதுரந் தாவிநல் காதிருந்தக்
காலங் கனலம் பெறவரைந் தேகிழி கைக்கொள்வனே.

(கு-உரை.) கால் - காற்று. அம் - நீர். கனல் - தீ. அந்தரம் - ஆகா யம்; பஞ்சபூதமாக உள்ளவர். கண்ணில் - கணுக்களில். மணி கால் - முத்துக் களைக் கக்குகின்ற. அம் கன்னல் - அழகிய கரும்புகளையுடைய. கழனி - வயல். கங்குற்கால் அங்கு - இரவினிடத்தே. அம்புலி அனலைத் துரந்து. ஆவி - என் உயிராகிய தலைவியை. கங்காளர் ஆவியை நல்காதிருந்தக்கால். அங்கம் நலம்

பெற வரைந்து - தலைவியின் உருவத்தை அழகு அமைய எழுதி. கிழி கைக் கொள்வன்; கிழி - படம். மடலேறுவேனென்றபடி.

கூழைக்கங்காளர் திருவருளால் தலைவியைப் பெறேனாயின் மடலேறுவே னென்பது கருத்து.

இது மடலேறுதலைத் தலைவன் தன்மேல்வைத்துச் சாற்றல்.

73. கைக்கய மன்றுரி தென்கூழைச் சங்கர காபத்துத்தி
கைக்கய மன்று ணடிக்கும் பிரானென்று கைதொழுமேற்
கைக்கய மன்றொடர் காலமெக் காலமக் காலமருள்
கைக்கய மன்று மனமே யொழியுங் கருக்குழியே.

(கு-உரை.) கயம் - யானையை. அன்று உரித்த. கா - காத்தருள்க. பத்துத் திகைக்கு ஐய; திகை - திசை; ஐய - தலைவனே. பிரான் - பிரானே. தொழு - தொழுவாயாக. மேல் - பின்பு. கைக்க - வெறுக்க. யமன்தொடர் காலம் எக் காலமோ அக்காலத்தில். அருள்கைக்கு - அவர் அருள்செய்வதற்கு. ஐயம் அன்று - சந்தேகம் இல்லை; அன்றென்பது இன்றென்னும் பொருளில் வந்தது.

மனமே, தொழு; அருள்கைக்கு ஐயமின்று; கருக்குழி ஒழியும்.

74. கருந்தா ரணிகுழல் பங்காளர் கூழைக்கங் காளர்பொன்ன
கருந்தா ரணியு மயனு முராரியுங் காண்பரியார்
கருந்தா ரணிமதற் காய்ந்தோ ரிளங்களி வண்டுகனு
கருந்தா ரணியலென் கைத்தா மரைவரக் காண்கிலனே.

(கு-உரை.) தாரணிகருங்குழல் - உமாதேவியார். பொன்னகரும் - பொன் னுலகத்திலுள்ளவரும். தாரணியும் - பூமியிலுள்ளவர்களும்; இவை இடவாகு பெயர்கள். கரு தார் அணி - பெரிய கொடிப்படையையுடைய; கருமை - பெருமை; தார் - கொடிப்படை; அணி - படைவகுப்பு; "ஒன்னார், தாரணி தானவஞ்செய்தான்" (திருவரங்கத்தந்தாதி, டு.) வண்டு கள்ளை நுகருகின்ற. தார் - பூ; அணியல் - மாலை. காய்ந்தாரது அணியல் வரக் காண்கிலனென இயைக்க.

இது தலைவிகூற்று.

75. காணப் பதஞ்சலி யாடிய கூழைக் கடவுட்கஞ்ச
காணப் பதஞ்சலி செய்வலென் றேடி நடந்ததெல்லாம்
வீணப் பதஞ்ச லிகலா முனக்கவர் மீதுமையல்
பூணப் பதஞ்சலி யாநின்ற தென்னினிப் பூங்கொடியே.

(து-உரை.) பதஞ்சலி காண ஆடிய. கடவட்கு. அஞ்சம் நாண - அன்னப்பறவை நாணும்படி. பத்து அஞ்சலி செய்வலென்ற; பத்து - தொகுத்தல் விகாரம்; "பதஞ்சலி யாதரைக் காசுங் கொடார்" (திருவேரகயமகவந்தாதி, கக.) நாண நடந்ததெல்லாமென இயைக்க. அப்பது - அம்புகளும்; அது பகுதிப்பொருள் விகுதி. அஞ்சு அல் - அஞ்சப்படுகின்ற இருளும். அஞ்சு அப்பு - ஐந்து அம்புகளுமாம். உனக்கு இகலாம்; இகல் - பகை. அவர் மீது மையல் பூண - அவர்மீது மயக்கம் பூணுதலால். பதம் சலியாநின்றது. என் - இதற்குக் காரணம் யாது? இனி - இப்பொழுது. ஓடி நடந்ததெல்லாமென்றதனுற் பதம் சலித்தல் பெறப்பட்டது.

முன்னர் அஞ்சலிசெய்யப்போனது பயனற்றசெயல்; மீண்டும் போதற்கு முயல்கின்றது யாது என்பது கருத்து.

பூங்கொடியே! பதஞ்சலியாநின்றது என்.

இது பாங்கிகூற்று.

76. பூங்கமு காரஞ் சொரிகூழை நம்பர்பொற் ருளின்மலர்
ஆங்கமு காரஞ் செல்லரர் சிலம்பினி னங்கைவளை
நீங்கமு காரவிந் தஞ்சரு காக நினைத்துமனம்
ஏங்கமு கார விசைத்தீ விளைக்கு மிளங்குயிலே.

(து-உரை.) கமுகு - பாக்குமரம். ஆரம் - முத்துக்களை; முத்துப்பிறக்கும் இடங்களிற் கமுகும் ஒன்று. மலரையும்; ஆம் கம் - மேன்மேலும் ஊறுகின்ற தீர்த்தத்தையும். பொற்றாளில் உகாத சிறியவர்களுடைய. அகம் - மனத்தில். நின் அங்கைவளை நீங்க. முக அரவிந்தம் - முகமாகிய தாமரைப்பூ. மனம் ஏங்க - உன்னுடைய மனமானது ஏங்க. முகாரவிசை - முழக்கத்தையுடைய இராகம்; முகாரம் - முழக்கம்; நீட்டல் விகாரம்; முகாரிராகத்தையே முகாரமென்றாரென்றலுமாம். இசையாகிய தீயைக் குயில் விளைக்கும்.

இது பாங்கிகூற்று.

77. குயிலாய மாமனை யுள்ளிருந் தாவியைக் கொள்ளைகொள்ள
அயிலாய மாமனை யப்பனை வாவென் றழைப்பதுபார்
கயிலாய மாமனை யன்றடுங் கூழைக் கடவுளுவ
மயிலாய மாமனை யாவுடை மாதிடம் வைத்தவனே.

(து-உரை.) குயில் ஆயம் - குயிற்கூட்டங்கள். மாமனையுள் - மாமரமாகிய வீட்டினுள்ளே. அயில் ஆய - கூர்மையையுடையனவாகிய. மா மன் -

வண்டுகள் தங்கப்பெற்ற. ஐ அப்பனை - ஐந்து மலர்ப்பாணங்களையுடைய மன்மதனை. அயிலாய அம்பெங்க. குயிலாயம் அழைப்பது பார்; "சூர மாங் குயிற் சின்னங்கள காமத் துரைவந் தான்றுரை வந்தானென் றூத" (திருக்குற்றாலத்துறவஞ்சி, சக) கயிலாய : விளி. மாமனை - தக்கனை. கடவுள : விளி. உவமை இல்லாய் - உவமையில்லாதவனே. அம் மா மனை - அழகிய திருமகளின் தலைவராகிய திருமாலை. ஆவுடைமாது - ஆவுடைய நாயகி.

கயிலாய! கடவுள்! வைத்தவனே! குயிலாயம் மன்மதனை அழைப்பது பார்.

இது பாங்கிகூற்று.

78. வையக மத்தனை யுந்தனி யாள வரினுமவை
பொய்யக மத்தனை யானனை கூழைப் பொருப்புவில்லி
துய்யக மத்தனை சிறறிடை பாகன் றுணைப்பதமா
மெய்யக மத்தனை வோர்க்கு மதேயன்றி வேறில்லையே.

(கு-உரை.) வையகம் அத்தனையும் - உலகம் முழுவதையும். அவை - அச் செல்வங்கள். பொய்ய-பொய்ம்மையாக உள்ளன கம் அத்தன்-கபாலத்தை அணிந்த திருக்கரத்தை யுடையார். பொருப்புவில்லி - மேருவில்லையுடையார். துய்ய கமத்தன்; கம - நிறைவு. ஐ - தலைவன். மெய் அகம் அத்தம் - மெய்ம்மையையுடைய இடமே பொருள். னைவோர்க்கும் - னைந்திருக்கும வறிஞர்களுக்கும்; உம்மை இறந்தது தழுவியது. அதே அன்றி - அந்தச் செல்வமே அல்லாமல்.

செல்வர்க்கும் வறிஞர்க்கும் அவருடைய திருவடிகளே உண்மையிடமான பொருளென்பது கருத்து.

பி-ம். 'தனியாள வரினுமது'

79. இல்லை யரும்பவ மெந்தைதென் கூழை யிறைநடனம்
அல்லை யரும்பவ னுலமுண் டோனருட் சோதியென்று
சொல்லை யரும்ப வசமழி யாமுனந் தோகையரை
முல்லை யரும்பவர் மூரலென் றோடி முயங்குநெஞ்சே.

(கு-உரை.) அரும்பவம் இல்லை. நடனத்தை அலவில் அயரும் பவன். என்றசொல். ஐ அரும்ப - கோழை கண்டத்தில் தோன்ற. அம தோகையரை நோக்கியென ஒரு சொல் வருவிக்க. அவர் மூரல் முல்லையரும்பென்று. ஐ அரும்ப வசம் அழியாமுன்: "ஐய மருந்தியக் கக்குறு காமு ணரங்கர்க்கன்பாய, ஐய மருந்தியும் வாழ்மின்கண் மேலுமக் கானந்தமே" (திருவரங்கத்தந்தாதி, கக).

நெஞ்சே! வசமழியாமுன்னே சொல்; சொன்னாற் பிறப்பு இல்லை.

80. முயலக னாக முரியநின் றாடி முதுபலிதேர்
செயலக னாக முனிக்களித் தோய்சந்த்ர சேகரனே
இயலக னாக வனமென வாழு மிறைவவென்றே
மயலக னாக ரிகமாதர் மீதின் மடநெஞ்சமே.

(து-உரை.) முயலகனுடைய ஆகமானது முரியும்படி; முரிய - நெளிய. ஆடி: விளி. செயல - செயலையுடையாய். கல் நாகம் முன் - கல்லானைக்கு முன்பு. இக்குஅளித்தோய் - கரும்பைக் கொடுத்தவனே. இயல் அகம் - இலக்கணம் பொருந்திய வீடு. நாகவனம் - புன்னைவனம். நாகவனம் இயலகமென வாழும் இறைவ: "வாசமென ராசை வந்த வருட்கடலே"(௨௮) என்றார் முன்னும். என்று - என்று சொல்லி. மயல் அகல்.

நெஞ்சே! ஆடி, செயல, அளித்தோய், சந்த்ரசேகரனே, இறைவ என்று சொல்லி மாதர்மீதுள்ள மயலை அகல்.

81. மடங்கலை வாரண மாய்ப்பது போல மதர்விழியீர்
நுடங்கலை வாய்த்த மருங்குலை மாய்க்கு நுமதுமுலைத்
தடங்கலை வாரில்லை யேலுயிர் கொண்டெவர் தாமிருப்பார்
முடங்கலை வாரிநஞ் சுண்டோர்தென் கூழை முகில்வரைக்கே.

(து-உரை.) மடங்கலை - சிங்கத்தை. வாரணம் - யானை. சிங்கத்தை யானை மாய்ப்பபதுபோல: இல்பொருளுவமை. நுடங்கலை - அசைதலை. மருங்குலை - இடையை. மாய்க்கும் - தேயச்செய்கின்ற. முலைத்தடம் - கொங்கை; எழுவாய். கலைவார் இலையேல் - கலையாலாகிய கச்சு இல்லையாயின். எவர் உயிர் கொண்டிருப்பார். முடங்கு அலை - வளைந்த அலைகளையுடைய.

இது, குலோத்துங்கசோழன்கோவையிலுள்ள "மட்டார் குழலி" (௬௫) என்னும் செய்யுளையும், "உருகுவாருயிர் படுபடாமுலை யுழறுமேலுல கிறுமெனத் திருகுவார்முடி விசிவிடாதவர் திறமினோகடை திறமினோ" [illegible]ப் பரணி, ௩௨) என்பதையும் போன்றது.

இது தலைவன் தலைவியைப் புகழ்தல்.

82 வரைக்கே கயமொரு பங்காளர் கூழை வரதர்வெற்பில்
இரைக்கே கயநதி போங்குரு கேயன் றிறைவர்சொன்ன
உரைக்கே கயாமென் செய்தியெல் லாமங் குரைத்தருளித்
தரைக்கே கயமனைச் சந்த்ரோ தயமன்றித் தானிலையே.

(கு-உரை.) கேகயம் - மயில்; இங்கே உமாதேவியார். இரைக்கு - இரையைத்தேடியுண்பதற்கு. கயம் - குளம். குருகே - நாரையே. அன்று - கண்டகாலத்தில். இறைவர் - தலைவர். ஏகு - ஏகுவாயாக. அயரும் என் செய்தியெல்லாம் உரைத்தருள். இத்தரைக்கு - இத்தரையை மாய்த்தற்கு; ஏக யமன் - ஒற்றை யமன்; ஏகம் - ஒன்று; அந்தச்சந்த்ரோதயமே யமன்.

இது நாரைவிடுதூது.

83. தானவ ரப்புரங் காய்ந்தவர் கூழைபிற் சங்கரர்மால்
ஆனவ ரப்புரங் காட்டிய வேளுடற் கங்கியிட்டோர்
ஞானவ ரப்புரம் பெற்றடி போற்றுநற் றொண்டர்தம்மை
மானவ ரப்புரத் தென்னையங் காள மதிப்பதென்றே.

(கு-உரை.) தானவர் - அசுரருடைய. புரம் - புரங்களை. மால் ஆனவர் - திருமாலாகிய இடபத்தையுடையவர்; ஆன் - இடபம். அப்பு உரம் - அம்பின் உரத்தை. உடற்கு உடலை வேகும்படிசெய்தற்கு. அங்கி - நெருப்பை. அங்கி - சட்டையென்று பொருள்கொண்டால், உடலுக்கு அங்கியிட்டோரென்னும் ஒருநயம் தோற்றுகின்றது. ஞானவரப்பு - ஞானமாகிய வரம்பு. உரம் - வலி. மான - ஒப்ப. வர - தம்பால் அடியேன் வர.

காய்ந்தவர், சங்கரர், அங்கியிட்டோர் என்னை ஆளமதிப்பது என்று.

84. மதியா தவனிரு கண்ணுருங் கூழை வரதர்வெற்பில்
விதியா தவனிறைந் தோர்க்கும் விதித்தவெங் கூற்றெனவே
உதியா தவனிதை யெங்கே யுதித்த துறையுமிவர்
பதியா தவனிகொல் லோவிசும் போவென் பகர்கின்றதே.

(கு-உரை.) மதி ஆதவன் - சந்திரனும் சூரியனும். விதி - பிரமனானவன். ஆ - ஐயோ. தவம் நிறைந்தோர்க்கும் விதித்த. வெங்கூற்றெனவே உதியாத வனிதை - யமனென ஆண்வடிவங்கொண்டு தோன்றாத வனிதை; விதித்த வனிதை; உதியாத வனிதை; கூற்றெனத் தோற்றமில்லையாயினும் செயலால் அவனை ஒப்பாளென்பது கருத்து; "பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம், ஆண்மையிற் றிரிந்துத னருந்தொழி றிரியாது......பெண்மையிற் றிரியும் பெற்றி" (சிலப்பதிகாரம், டு: உகக—உஉ.) என் பகர்கின்றது - என்ன சொல்வது.

திணை கைக்கிளை. துறை ஐயம்.

85. பகலவ னங்கண் பறித்தோர்தென் கூழைப் பரமர்வில்வேள்
இகலவ னங்க னெனவிழித் தோர்வெற்பி லென்னையன்பர்
அகலவ னங்க யரும்படி சேரு மவசமெல்லாம்
புகலவ னங்க ளிலேயோ வவர்முனம் பூவையரே.

(கு-உரை.) பகலவன் - பகனென்னும் சூரியனுடைய; "பகன்றாமரைக் கண் கெடக் கடந்தோன்" (திருச்சிற். கஅ௪). அநங்கனென - உடம்பில்லாதவனாக. அன்பர் அகல. அல் - இருளும். நங்கு - பழிமொழியும்; "நங்கஞ்சுந் திருவடிவுளை" (ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் வாக்கு; "துங்கஞ்சார்,") அயரும்படி - யான் துன்பமுறும்படி. சேரும் - சேர்தலால் உண்டாகிய. அவர் முன்னம் புகல - அவர் முன்னே தூதாகச் சென்று சொல்லுவதற்கு. அனங்கள் - அன்னப் பறவைகள்.

இது தலைவிகூற்று.

பி-ம். 'அகல வனங்கசரம்படி சேரும்'

86. பூவைய மாதவன் றேடுபொற் பாதர்பைம் புன்னைவனத்
தேவைய மாத ரிடவுக்ந் தோர்தென் னிராசைவெற்பிற்
பாவைய மாதனு வில்லைவெம் போர்செய் பகழியில்லை
மாவைய மாதழை யாலிவர் தாமெய்த வாறுநன்றே.

(கு-உரை.) பூவையம் - பூமியாகியவையம்; இருபெயரொட்டு; பூ: பொலிவுமாம். புன்னைவனத்தேவு; தேவு - தெய்வம். ஐயம் - பிட்சையை. மாதர் ஐயம் இட உகந்தோராது வெற்பில். பாவை - பாவையே; அம்மா : வியப்பிடைச்சொல். தனு இல்லை; தனு - வில். பகழி - பாணம். மாவை - விலங்குகளை. அ மா தழையால் - அந்தப் பெரிய தழையினாலே.

பாங்கி தலைவனை நகுதல்.

87. வாகைக் கணைகொடு வந்தோனை வெல்வ ராசையெந்தாய்
தோகைக் கணைகொடுங் கையா வயருந் துயரமெல்லாம்
போகைக் கணைகொடு செவ்வித ழல்லது பூங்கடுக்கை
ஈகைக் கணைகொடுங் காம விகார மெளிதல்லவே.

(கு-உரை.) வாகை - பிறரை வென்ற வெற்றியையுடைய; "வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்றவாறும்" (சீவக. க௪) என்பதன் உரையைப் பார்க்க. வந்தோனை - வந்த மன்மதனை. தோகைக்கு - தலைவிக்கு. கொடுங் கையே அணையாக அயருதற்குக் காரணமாகிய. போகைக்கு அணைவராயாக. செவ்விதழைக்கொடு. கடுக்கை ஈகைக்கு அண் - கொன்றைமாலையை அருளிச் செய்தலுக்கு வருவாயாக. நை - நைதற்குக்காரணமான. அல்ல வென்பது ஒருமைக்கும் வரும்.

இது பாங்கிகூற்று.

88. அல்லி யமரும் கமலம்வெய் யோனன்றி யார்திறந்தார்
கொல்லி யமரும் கடலாக வேபொருங் கூன்கருப்பு
வில்லி யமருந் தொலையவந் தீரிந்த வெவ்விருளில்
வல்லி யமரு மொருபாகர் கூழை வரையணங்கே.

(து-உரை.) அல்லி - அகவிதழ். கமலத்தை வெய்யோனன்றி யார் திறந்தார். அருங்கடல் கொல் இயம் ஆக; இயம் - வாத்தியம். கூனகருப்பு வில்லி - மன்மதனது. இருளில் வந்தீர். வல்லி அமரும் - உமாதேவியார் விரும்பி எழுந்தருளியிருக்கும்.

"தாமரை வென்ற கண்ணோன்" (திருச்சிற். கசுச) என்ற செய்யுளைப் பின்பற்றிவந்தது இச்செய்யுள்.

இரவுக்குறிக்கண் தலைமகளைத் திருமகளாகப் பாவித்துத் தலைவன்கூறியது.

89. அணங்கர சேபொரு மாமத யானை யதனையொரு
கணங்கர சேல்கரந் தென்னமின் னார்பொற் கலைகுலையும்
வணங்கர சேகரத் தேற்றா ருமைவள்ளை யாற்றழும்பு
பணங்கர சேதனர்க் கெய்தார்தென கூழைப் பனிவரைக்கே.

(து-உரை.) யானையதனை - கொங்கையாகிய யானையை. ஒரு கணம் - ஒரு கணநேரம். கர - மறைத்துக்கொள்வாயாக. சேல் கரந்து என்ன - கண்ணாகிய மீனைக் கரத்தலால் வரும் பிரயோசனம் யாது. மினனார் - தாருகாவனத்து முனிவருடைய மனைவிமார். கரசேகரத்து - கையிலுள்ள பிரமன் தலையில். ஏற்றார் - இரந்தவர். தழும்பு பண் அங்கர் - தழும்புபண்ணிய உறுப்பை உடைய வர். அசேதனர்க்கு எய்தார்.

யானையதனைக் கர; சேல் கரந்தென்ன: "தொடலை தைஇய மடவரன் மக ளே, கண்ணினுங் கதவநின் முலையே" ஐங்குறுநூறு, நசுக.

இது நாணிக்கண்புதைத்தல்.

90. பனியாழி யங்கண் பவளச்செவ் வாய்முத்தின் பத்திநகை
இனியாழி யன்மொழி மின்னார்க் கிரங்கல மேத்தரிக தத்
தனியாழி யன்றருள் கூழைப் பிரான நட் சாகரத்திற
குனியா ழியம படர்க்குமஞ் சேணமருள் கூர்நெஞ்சமே.

(து-உரை.) ஆழி - கடல். இன்யாழ் இயல்மொழி. கண்ணையும், வாயையும், நகையையும், மொழியையும் உடைய மினனார்க்கு இரங்கலம். ஏத்து

அரிக்கு. தனிஆழி - ஒப்பில்லாத சக்கரத்தை. அருட் சாகரத்தில் - கருணைக் கடலில். குனி - ஆடுவாயாக. ஆழ் - ஆழ்வாயாக. அருட்சாகரத்திற் குனி; ஆழ். இயமபடருக்கும் அஞ்சேல்.

பி-ம். 'இரங்கலமே யரிக்கு'

91. கூரத் திரவிழி மேன்முத்தும் பொன்னுங் கொழிக்குமென்றால்
ஆரத் திரவிய மாசைகொள் வாரம் புலியையந்தி
நேரத் திரவியெண றெண்ணார் மருங்கை நெருங்குதன
பாரத் திரவிர் சடையாளர் கூழைப் பதியன்பரே.

(கு-உரை.) கூர் அத்திர விழிமேல் - கூர்த்த அத்திரம்போன்ற கண்களில். முத்தும் பொன்னும் கொழிக்கு மென்றால்; முத்து - கண்ணீர்த்துளி; பொன் - பசலே; "ஆய்மல ருண்கட் பசலே" (அகநானூறு, ருஉ:கச); "கண் பசலே பூத்த காமம்" (சீவகசிந்தாமணி, உருக.) அத் திரவியத்தின்கண் ஆசை கொள்வார் ஆர்; அத்திரவியம்; அ: நெஞ்சறிசுட்டு. அம்புலியை - சந்திரனே. அந்திநேரத்து இரவியென்று எண்ணார் கூழைப்பதியன்பர். மருங்கை நெருங்கு தனபாரத்தி - தனபாரத்தையுடைய பாங்கிமார்களே.

இச்சமயத்தில், நீர் பொருள்தேடப் பிரிந்துசெல்லுதல் பொருந்தாதென்பது கருத்து.

"வானக்கடிமதிற்றில்லே" (திருச்சிற். உருடு) என்னும் செய்யுளைப் பின்பற்றி வந்தது இது.

இது தலைமகன் பொருள்வயிற் பிரியக்கருதியவழிப் பாங்கி தோழிமார்களை நோக்கிக் கூறியது.

92. அன்பரி வைத்த சாணா விந்த னயன்சிரத்தை
முன்பரி வைத்தனி வாளுகி ரோன்சமண் முற்றுமற
என்பரி வைத்தனு வாக்கிதன் தந்தை யிராசைவெற்பா
நின்பரி வைததளர் நீயே யவட்கு நிகழ்த்துகவே.

(கு உரை.) அரி அன்புவைத்த. முன்பு அரி - முன்னமே அரிந்த. வை தனி வாள் உகிர் - கூர்மையையுடைய ஒப்பற்ற வாள்போன்ற நகம். என்பை. அரிவைத்தனு ஆக்கி - பெண்ணின்வடிவமாக்கின திருஞானசம்பந்தமூர்த்திநாயனுருடைய. வெற்பா - தலைவனே. நின் பரிவை - உன் வருத்தத்தை. தளர் நீயே - தளர்வுற்றிருக்கும் நீயே. நின் பரிவை நீயே நிகழ்த்துக.

இது, பாங்கி நின்குறை நீயே சென்றுரை யென்றல்.

93. நிகராலே யஞ்சிலே வாணுதற் கென்னுமன் னேமயக்கம்
தகாலே யறுண் மருங்குன்மின் ஞர்க்குத் தணியுங்கொலோ
பகராலே யம்பை யணைகொண்ட மால்பணி யும்பதத்தார்
மகரா லேயவிட முண்டோர்தென் கூழை வரதருக்கே.

(கு-உரை.) ஆலே அஞ்சிலே - கரும்பாகிய அழகிய வில். வாணுதற்குச் சிலைநிகர் என்னும் அன்னே. தகரால் - ஆட்டினுல். ஐயம் - சந்தேகம். மின் ஞர்க்குத் தகரால் மயக்கந் தணியுங்கொல்லோ. ஆலே - ஆலிலையை. அம்பை - நீரையுடைய கடலே. அணை - பாயல். மகராலய விடம் - கடலிற்றேன்றிய விடத்தை. வரதருக்குப் பகர்.

இது, வெறியெடுத்தவழிப் பாங்கி செவிலித்தாயைநோக்கி அறத்தொடு நிற்றல்.

பி-ம். 'என்னுமின்னே'

94. வரந்தரு வார்தென் வாராசை யீசர் வயங்கியசிந்
துரந்தரு வாவுரி யாடையர் மாமலைத் தோகைபங்கர்
நிரந்தரு வாயுரு வாயெங்கு நின்றரு ணின்மலரோண்
காரந்தரு வாவென்று லோபரை யேத்துங் கருத்தறவே.

(கு-உரை.) சிந்தூரம் - யானையை. தருவாக உரித்த - மரத்தின்தோலை உரிப்பதுபோல உரித்த. நிரந்து - நிரம்பி. அருவாய் உருவாய் நின்றருள் நின்மலர். தரு ஆ வென்று - கற்பகமே, காமதேனுவே யென்று; தரு கற்பக மென்னும் பொருளதாய்நின்றது; "தருக்காவலா" (திருவரங்கத்தந்தாதி, க); "ஒதியிலே வேலே வளர்ப்பாய் தருவை யொடித்தெறிந்தே" பழமலேயந்தாதி, ௬.

வாராசையீசர், எத்தும் கருத்தற வரந்தருவார்; அவரை எத்துங்க ளென்ற படி. இது விற்பூட்டுப்பொருள்கோள்.

பி-ம். 'ஆடையர் பச்சைக் கவுரிபங்கர்'

95. அறந்திருக் தாநின்ற ராசையெங் தாயணங் கென்வயிற்றிற்
பிறந்திருக் தாளன்று தொட்டுயர் வானிற் பிறந்தநிலா
நிறந்திருக் தார்புரங் காய்ந்த நகையென்று நின்றுதன்னே
மறந்திருக் தாதளே பூங்கொன்றை யொன்று மறந்திலளே.

(கு-உரை.) அறம் - தருமம். அணங்கு - தலைவி. இருந்தாள் - கவலையின்றி வளர்ந்துகொண்டிருந்தாள். அன்றுதொட்டு - தேவரீரைக்கண்ட அன்றுதொட்டு; அன்று ; நெஞ்சறிசுட்டு. திருந்தார் - பகைவருடைய. நிலாவின் நிறமானது, திருந்தார் புரத்தைக்காய்ந்த நகையிற் றோன்றிய தீயைப்போல்வது; "சுந்தரன் றூதன் சமரிலன்று, பொருந்தார் புரத்திட்ட தீப்போன் மதியம் புறப்பட்டதே" (தனிப்பாடல்.) என்று - என்றுசொல்லி. தன்னை மறந்து - அவசமாகி. இரு தாது அளைந்த பூங்கொன்றை ஒன்றைமட்டும் மறந்திலள். நற்றாய்க்கும் தனக்கும் உள்ள ஒற்றுமைபற்றி என்வயிற்றிற் பிறந்திருந்தாளென்றாள்.

இது செவிலிகூற்று.

96. திலக மெழுது நுதல்பாகர் கூழைத் திகம்பரர்க்கன்
பிலக மெழுகி னுருகேம்வெவ் வேறெய்து மைம்புலனை
விலக மெழுபவ மெவ்வாறிங் கோயுமண் விண்முதலாம்
உலக மெழுமென் குமிழிபென் பாரறி வுள்ளவரே.

(கு-உரை.) திகம்பரர்க்கு அன்பில் மெழுகின்அகம் உருகேம். வெவ்வேறு எய்தும் ஐம்புலனை விலகம்; விலகம் - நீங்கமாட்டேம். எழுபவம் - எழுவகைப் பிறவி. இங்கு எவ்வாறு ஓயும். உலகு அம் எழு மென்குமிழி என்பார்.

97. உள்ள முருக வொழியாத பாவியுள் ளத்திலுள்ள
கள்ள முருக வருள்வதென் றோசெங் கமலமுகை
விள்ள முருகலர் கூழைப் பிரான்விண்ணு ளோர்கள்சிறை
தள்ள முருகனை யீன்றே யருள்சிவ சங்கரனே.

(கு-உரை.) உருக ஒழியாத - உருகுதற்கு நேரமில்லாத. கள்ளம் முருக - கபடம் கெட; இது முருங்க என்பதன் விகாரம்போலும். முருகு அலர் - மணம் பரக்கின்ற. சிறை தள்ள - சிறையை நீக்க.

சிவசங்கரனே! அருள்வதென்றோ.

98. சங்கர நாரணர் தென்வா ரசைத் தனிக்குழைவெண்
சங்கர நாரண நம்பாலின் ணர்க்குத் தவித்திடுநெஞ்
சங்கர நாரண வேளெரித் தோர்சது வேதபிர
சங்கர நாரணங் கோர்பாக ரென்றஞ் சலித்தெண்ணுமே.

(கு-உரை.) வெண்சங்கைக் குழையாக உடைய அரனர். நம்பால் அண்ண. ரணவேள் - போரைச் செய்யும் மன்மதனை. வேதபிரசங்கர்: "விப்பிர சங்கந் தமிழ்வாணர் சங்கம் விளங்குறுகல், விப்பிரசங்கம்" (திருக்குற்றால யமக வந்தாதி.) அ நார் அணங்கு - அழகிய அன்பையுடைய உமாதேவியார். நெஞ்சம் கரம் நா - நெஞ்சமே, கரமே, நாவே. எரித்தோர், பிரசங்கர், பாகர் என்று துதித்து அஞ்சலித்து எண்ணுங்கள்; இஃது எதிர்நிரனிறை.

99. எய்தனந் தீவிட மானவர் மாமல ரேசன்சென்னி

... ... ... ... ...

... ... ... ... ...

... ... ... ... ...

(கு-உரை.) எய்து அனம் தீவிடம் ஆனவர் - எய்திய அன்னத்தை விடமாகப் பெற்றவர். மலரேசன் - பிரமன்.

100. ... ... ... ... ...

... ... ... ... ...

... ... ... ... ...

... ... ... ... ...

---

உ

# செய்யுள்முதற்குறிப்பகராதி.

[எண் - பக்க எண்.]